# கல்கி

KALKI
21. 1. 90
ரூ. 2. 50



●● நாடாளுமன்றத் தேர்தலில் ஏற்பட்ட தோல்விக்கு என்ன காரணம்?

●● ஓரிடத்தில் கூட வெற்றி பெறாத தி.மு.க. மத்திய அமைச்சரவையில் இடம் பெறலாமா?

●● டி. ஜி. பி. ரங்கசாமி மாற்றப்பட்டதேன்? கட்சிக்காரர்களின் தலையீடா?

— இப்படி ஏராளமான கேள்விகளுக்கு முதல்வர் கலைஞரின் சிறப்புப் பேட்டி....

# புத்துணர்ச்சியும் பொலிவும் வழங்கும் ஹமாம்!



கண்டுகொள்வீர் ஹமாம் புரியும் ஜாலத்தை,
இதுவரை காணாத கூடுதல் புத்துணர்ச்சியும்
பொலிவும் உமக்கு. புதுமை குன்றாமல்
நீடித்துக் கமழும் நறுமணம். சொகுசான
நுரைவளம்—வழங்கும் என்றும் புதுமையான
ஹமாம். புத்துணர்ச்சியையும்
பொலிவையும் உணருவீர்.

**ஹமாம்**
குடும்ப சோப்




டாட்டா தயாரிப்பு

CLARION/B/T/23/203 TAM







# அப்படியா விஷயம்...?

ரகுமான்கானுக்கு ஒரு சின்ன விஷயத்தில் பெரிய குழப்பம். சென்ற வருடம் விளையாட்டாக ஒரு பத்திரிகையில் தொடர் கட்டுரை எழுதப் போக, அதைப் பார்த்த சினிமாக்காரர்கள் சிலர் தங்களின் தயாரிப்பில் ஒரு படத்திற்குக் கதை, வசனம் எழுத வேண்டும் என்று வற்புறுத்திக் கொண்டே இருந்தார்களாம்.

''90 — இல் பார்ப்போம்'' என்று அப்போது சமாளித்திருக்கிறார் பூங்கா நகர் எம். எல். ஏ.

அவகாசம் கழிந்தாயிற்று. வாக்கைக் காப்பாற்ற வேண்டிய காலம். ரகுமான்கான் கதை வசனம் எழுதப் போகும் படத்தைத் தயாரிப்பவர் யாராக இருக்கும்...?

டி. ராஜேந்தரால் நடிகையாக அறிமுகப் படுத்தப்பட்டு, இன்று தெலுங்கில் தயாரிப்பாளராகக் கொடிகட்டிப் பறக்கும் ஜீவிதாவே அவர்!

**தி**டீரென்று தியேட்டரில் பார்க்கலாம்; கடற்கரையில் பார்க்கலாம்; பாண்டி பஜாரில் 'ஷாப்பிங்' செய்யும் போது பார்க்கலாம்... அந்தச் சமயங்களில் அரசியல் வாதிகளுக்கே உரிய மிடுக்கான ''வேட்டி சட்டை, சால்வை'' அணியாமல், பேண்ட் ஷர்ட்டுடன் இளைஞராகக் காட்சி அளிக்கிறார் சைதை துரைசாமி — முன்னாள் எம். எல். ஏ.

அவர் சொல்லும் காரணம்:

''மனைவி குழந்தைகளுடன் ஓய்வாக நேரத்தைக் கழிக்கப் போகையில் வழக்கமான வேட்டி, சட்டை அணிந்து போனால் எல்லோருடைய பார்வையும் என் மீதே இருக்கிறது. இதனால் ப்ரைவசி அவுட். பலவித கேள்விகள். குடும்பத்தினர் இயல்பாக இருக்க முடியாமல் சூழலே கெட்டுப் போய் விடுகிறது. இதைத் தவிர்க்க விரும்பினேன். விளைவு: ஆடை மாற்றம்; அந்தந்தச் சமயத்திற்கு மட்டும்.''

**பு**கைப்படம் என்பது பற்றிப் பேச நேர்ந்த போது காங்கிரஸ் எம். பி. தங்கபாலு சொன்னார்:

''நான் முதன் முதலில் எடுத்துக் கொண்ட புகைப்படம் எனது இருபதாவது வயதில் தான். அதுகூட இறந்து போன எங்கள் காளை மாட்டுடன் சேர்ந்து எடுத்துக் கொண்டதுதான்! நான் பிறந்தது எளிய விவசாயக் குடும்பம். போட்டோ எடுப்பதெல்லாம் ஆடம்பரமாகக் கருதப்பட்ட காலம். எனவே இருபது வயது வரை போட்டோவே எடுக்கவில்லை. எங்கள் வீட்டிற்காகப் பதினைந்து வருடங்களுக்கும் மேலாக உழைத்த காளை மாடு இறந்த போது, அதைப் படம் எடுத்து வீட்டில் வைக்க ஒரு போட்டோகிராபரை சேலத்திலிருந்து எங்கள் கிராமத்திற்கு வரவழைத்தோம். அப்போதுதான் அந்த மாட்டுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து நானும் போட்டோ எடுத்துக் கொண்டேன்.''

**ஜெ**யலலிதாவின் ஆலோசகர் நடராஜனுக்கு அரசியலில் 'இன்ஸ்பிரேஷன்' யாராம்? முரசொலி மாறன்தானாம்! ''கலைஞருக்கு மாறன் எப்படியோ, அப்படித்தான் நான் மேடத்திற்கு'' என்று அடிக்கடிச் சொல்கிறாராம்.

**சி**வாஜி தமிழக ஜனதா தளத் தலைவராக அறிவிக்கப்பட்ட அன்று அவருடைய இடது கரமான தளபதி சண்முகத்தைச் (வலது கரம்: ராஜசேகரன்) சந்தித்தேன்.

''அண்ணனுக்கு அகில இந்திய அளவிலே கட்சிப் பொறுப்பு தர்றதாத் தான் முதலில் சொன்னாங்க. அவர் டெல்லிக்குப் போய்ட்டா, அப்புறம் எங்களை மாதிரித் தொண்டர்கள் கதி...? ஜனதா தளத்தில் தமிழகத் தலைவர் பதவி தவிர வேற பதவிக்குச் சம்மதிக்கக் கூடாதுன்னு செயற்குழுவில் தீர்மானமல்லவா நிறைவேற்றினோம்,'' என்றார் பெருமையாக.

**— கல்தான்வி**

# “உரிமைகளுக்காக ஆரம்பிக்கப்பட்டதுதான் தி.மு.க...”

## –முதல்வர் சிறப்புப் பேட்டி

**கல்கி:** தி. மு. க. ஆட்சிப் பொறுப் பேற்று ஓராண்டு முடியப் போகிறது. இந்த ஓராண்டில் அதன் முக்கியமான சாதனைகள் என்ன?

**தமிழக முதல்வர் கலைஞர் மு. கருணாநிதி:** தமிழகம் கடந்த காலத்தில் தொழில் துறையில் பின்தங்கியிருந்தது. அதை முன்னேற்றும் பணியில் ஈடுபட்டதன் காரணமாக, கடந்த ஓராண்டாகத் தமிழகத் தொழில் துறை முன்னேறிக் கொண்டிருப்பதற்கான அறிகுறிகள் காணப்படுகின்றன. 88 – ஆம் ஆண்டில் தமிழகத்தில் தொழிற்சாலைகள் அமைக்க மத்திய அரசிடம் ஒப்புதல் பெற்ற கடிதங்கள் 99. நாங்கள் ஆட்சிப் பொறுப்பேற்ற 89 – ஆம் ஆண்டு நவம்பர் முடியப் பெற்றிருக்கிற ஒப்புதல் கடிதங்கள் 120. கடந்த 88 – 89 – ஆம் ஆண்டில் சிப்காட் மூலமாக 37 தொழிற்சாலைகளுக்கு 20.85 கோடி ரூபாய் கடன் வழங்கப்பட்டிருந்தது. தி. மு. க. ஆட்சிப் பொறுப்பேற்ற பிறகு, நவம்பர் முடிய மட்டும் 56 தொழிற்சாலைகளுக்கு 32 கோடி ரூபாய் கடன் வழங்கப் பட்டுள்ளது. கடந்த அரசால் மூடப்பட்டுப் பொது ஏலத்தில் விற்கப்பட இருந்த விருத்தாசலம் களிமண் கற்குழாய்த் தொழிற்சாலை தி. மு. க. அரசால் திறக்கப்பட்டு லாபத்தில் செயல்பட்டு வருகிறது. ஆலங்குளம் அஸ்பெஸ்டாஸ் தொழிற்சாலையின் உற்பத்தி, இந்த அரசு மேற்கொண்ட முயற்சியால் கணிசமாக உயர்ந்துள்ளது. நிர்ணயிக்கப்பட்ட திறனில் 120 சதம் இன்று உற்பத்தியாகிறது! 88 – 89 – ஆம் ஆண்டுக்கு முன் மூன்றாண்டுகளில் ஒட்டுமொத்தமாக 49.95 கோடி ரூபாய் நஷ்டம் அடைந்திருந்தது. தமிழ்நாடு செய்தித்தாள் நிறுவனம். இப்போது அதனை மாதம் மூன்று கோடி ரூபாய் அளவுக்கு லாபம் ஈட்டச் செய்திருக்கிறோம்! இதோடு ரூ. 850 கோடி முதலீட்டில் கரும்புச் சக்கையைக் கொண்டு செய்தித்தாள் அச்சுக் காகிதம் தயாரிக்கும் பெரிய திட்டம் ஒன்றையும் தயாரித்துக் கொண்டிருக்கிறோம்.

மணலியில் இரண்டாயிரம் கோடி ரூபாய் முதலீட்டில் முழுவதும் ஏற்றுமதிக்கான பெட்ரோலியப் பொருட்களைப் பகுத்தெடுக்கும் தொழிற்சாலை ஒன்றை அமைக்க ஆர். பி. ஜி. லிண்டே நிறுவனம் முன்வந்திருக்கிறது. அது அமையும் போது அதைச் சார்ந்த சில சார்புத் தொழிற்சாலைகள் அமையும் வாய்ப்பும் உள்ளது. சென்னை எண்ணெய்ச் சுத்திகரிப்பு ஆலையும் ஸ்பிக் நிறுவனமும் சேர்ந்து 1,400 கோடி ரூபாய் முதலீட்டில் நேஷனல் ஆரோமேட்டிக் திட்டம் ஒன்றைச் செயல்படுத்த உள்ளது. வேதாரண்யத்தில் உற்பத்தியாகும் உப்பை விற்பனை செய்வதற்கு உதவியாக 58 கோடி முதலீட்டில் கடல் சார்ந்த ரசாயன வளாகம் ஒன்றும் நிறுவப்படவுள்ளது. கழக அரசு பொறுப்பேற்ற பிறகு, மேலூரில் 7.71 கோடி முதலீட்டில் ‘இண்டஸ்ட்ரியல் டைமண்ட் லிமிடெட்’ தொழிற்சாலையும், கடலூரில் 19 கோடி முதலீட்டில் உஷ்டா – தே பயோடெக் தொழிற்சாலையும் 5.48 கோடி முதலீட்டில் பூச்சிக்கொல்லி மருந்துத் தொழிற்சாலையும், புவனகிரியில் 17.90 கோடி முதலீட்டில் கண்ணாடித்தகடு தொழிற்சாலையும் துவங்கப்பட்டிருக்கின்றன.

இவையன்றித் தமிழகத்திலுள்ள தொழிலதிபர்களை மாத்திரமல்ல இந்தியாவிலுள்ள பல்வேறு தொழிலதிபர்களையும் நேரடியாக அழைத்துப் பேசியிருக்கிறேன். இந்தியாவிலுள்ள மற்ற தொழிலதிபர்களிடம் பேசியதோடு மட்டுமல்லாமல், அவர்கள் தமிழகத்தில் தொழில் துவங்கினால் இந்த அரசு புதிதாக என்னென்ன சலுகைகள் அளிக்கும் என்பதையெல்லாம் விளக்கமாகத் தமிழகத்தின் முதல்வர் என்கிற முறையில் தனித்தனியாகக் கடிதமும் எழுதியிருக்கிறேன். அவர்களும் உற்சாகத்தோடு முன்வந்திருக்கிறார்கள்.





அந்த அம்மாள் (ஜெயலலிதா) சொன்னதைத் தமிழக மக்கள் ஏற்றுக் கொண்டார்களோ, இல்லையோ, கல்கி பத்திரிகை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறதே!



புதிய தொழிலகங்களைத் தொடங்குவதோடு ஏற்கெனவே நஷ்டமடைந்து மூடப்பட்ட தொழிலகங்களை மீண்டும் திறந்து அவை செம்மையாக இயங்குவதற்கான ஏற்பாடுகளையும் இந்த அரசு செய்து, கணிசமான வெற்றி கண்டிருக்கிறது.

இப்படித் தொழிற்சாலைகளை அதிகரிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிற அரசு, அந்தத் தொழிற்சாலைகளுக்குத் தேவையான மின்சார உற்பத்தியையும் அதிகரிக்க வேண்டுமல்லவா! அதைக் கருத்தில் கொண்டும் இந்த அரசு செயலாற்றி வருகிறது. 86 — 87 — ஆம் ஆண்டிலேயே ஆரம்பிக்கப்பட்டிருக்க வேண்டிய வடசென்னை அனல் மின் நிலையம், அது அமைய வேண்டிய இடத்துக்குச் சொந்தக்காரர் இடம் கொடுக்க மறுத்த காரணத்தால், முந்தைய அரசும் வலியுறுத்தாத நிலையில் அது ஆரம்பிக்கப்படாமல் போயிற்று. நாங்கள் பொறுப்புக்கு வந்த பிறகு, நிலச் சொந்தக்காரர்களை அழைத்துப் பேசி ஒரு சுமுகமான தீர்வு கண்டு அது இப்போது தொடங்கப்பட்டிருக்கிறது. அது துவங்குவதில் ஏற்பட்ட கால தாமதம் காரணமாக முன்பு 500 கோடியாக இருந்த முதலீடு, இப்போது 700 கோடியாக உயர்ந்திருக்கிறது என்பதை



**"உரிமைகளைப் பெறுவதற்கான விலை இதுபோன்ற தோல்விகள்தான் என்றால், அந்த விலையைத் தருவதற்கு நாங்கள் எப்போதும் தயாராகவே இருக்கிறோம்."**

யும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். தொழில் துறையைப் பொறுத்தவரை தமிழ்நாடு ஏற்கெனவே பெற்றிருந்த மூன்றாவது இடத்தை வெகு விரைவில் மீண்டும் பெற வேண்டும் என்பதில் மிக அக்கறையோடு செயல்பட்டு வருகிறோம்.

கல்கி: விவசாயத்துக்காக இந்த அரசு என்ன செய்கிறது?

முதல்வர்: விவசாயிகளுடைய பிரச்னை ஒரு நீண்டகாலப் பிரச்னையாக இருந்து வருகிறது. கூட்டுறவுக் கடன்களை முந்தைய அரசு ரத்து செய்திருந்த போதிலும் 67 கோடி ரூபாயைக் கூட்டுறவு வங்கிகளுக்கு அரசு திரும்பச் செலுத்தாமலே இருந்தது. அந்த நிலுவையையும் இந்த அரசு ஏற்றுச் சிறு விவசாயிகளுக்கு உதவும் வகையில், அவர்களின் கோரிக்கைக்கு ஏற்ப இந்த அரசு 39 கோடி ரூபாய்க் கடன்களை ரத்து செய்தது. ஆகமொத்தம் 106 கோடி ரூபாய் கடன்களுக்குத் தி.மு.க. அரசு பொறுப்பு ஏற்றுள்ளது. இதுவன்றி விவசாய இடுபொருள்களுக்கான வரிச் சலுகைகளைச் செய்திருக்கிறோம். ஐந்து குதிரைச் சக்தி கொண்ட விவசாய மின்சார மோட்டாருக்கான 75 ரூபாய்க் கட்டணத்தை ஐம்பதாகக் குறைத்திருக்கிறோம். நெல் கொள்முதலில் மத்திய அரசு நிர்ணயிக்கும் விலையை விட 35 ரூபாய் அதிகம் கொடுத்துக் கொள்முதல் செய்கிறோம்.

கல்கி: விவசாயத்துக்கான அடிப்படைப் பிரச்னை தண்ணீர்ப் பிரச்னை. தண்ணீர் இருந்து விட்டால் நல்ல மகசூல் இருக்கும். மகசூல் இருந்தால் விவசாயிகள் வாங்கிய கடன்களை ரத்து செய்ய வேண்டிய அவசியம் இருக்காது. எனவே, தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்க இந்த அரசு என்ன செய்யவுள்ளது?

முதல்வர்: தமிழக விவசாயத்துக்குத் தேவையான தண்ணீரைப் பொறுத்தவரை இரண்டாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். ஒன்று: நதி நீரால் வளம் பெறுகிற நிலங்கள். இரண்டாவது, மழை நீரால் மாத்திரமே வளம்பெறும் வாய்ப்புள்ள நிலங்கள். மழை நீரை நம்பியுள்ள விவசாயிகளுக்கு பம்ப்செட் வைத்து நீரிறைத்துக் கொள்ள மின் இணைப்புக் கொடுக்கிறோம். 33 – ஆம் ஆண்டு தான் தமிழகத்துக்கு மின்சாரம் அறிமுகமானது. அப்போதிருந்து, 66 – ஆம் ஆண்டு காங்கிரஸ் ஆட்சி இருந்தவரை மின் இணைப்புக் கொடுக்கப்பட்ட பம்ப் செட்டுகளின் எண்ணிக்கை 2.5 லட்சம்தான். அதன் பிறகு கடந்த 76 – இல் தி.மு.க ஆட்சி கலைக்கப்படுகிறவரை கொடுக்கப்பட்ட மின் இணைப்புகளின் எண்ணிக்கை எட்டு லட்சம். அதன் பிறகு கொடுக்கப்பட்ட மின் இணைப்புகளையும் சேர்த்தால் ஏறத்தாழ 13 அல்லது 14 லட்சம் பம்ப் செட்டுகள் இருக்கலாம். இவற்றுக்கெல்லாம் மின் கட்டணத்தைக் குறைத்து, மழையில்லாத வறட்சிக் காலங்களில் விவசாயிகளின் சுமைகளைப் பகிர்ந்து கொள்கிறோம். நதி நீரை நம்பி வாழ வேண்டிய நிலையில் உள்ள மாவட்டங்கள் தஞ்சை, திருச்சி, தென்னாற்காடு, வடாற்காடு மாவட்டங்கள். குறிப்பாகத் தஞ்சையும் திருச்சியும் காவிரி நீரை நம்பியுள்ளவை. தமிழகத்துக்குத் தேவையான அரிசியில் பெரும் பகுதியை வழங்கும் மாவட்டமாகத் தஞ்சை உள்ளது. 1924 – ஆம் ஆண்டு செய்து கொள்ளப்பட்ட காவிரி நதி நீர்ப் பங்கீடு குறித்த ஒப்பந்தப்படி ஆயக்கட்டுக்காரர்கள் பாதித்துவிடக்கூடாதுஎன்பதில்எம்.ஜி.ஆர். அரசும் சரி தி.மு.க. அரசும் சரி ஒரே கருத்துக் கொண்டவையாகத்தான் இருந்தன. இப்போதைய தி.மு.க. அரசும் அதே கருத்தைத்தான் கொண்டுள்ளது. இதில் அரசியலுக்கு இடமே இல்லை. 68 – ஆம் ஆண்டில் கர்நாடக அரசுஹேமாவதி போன்ற அணைக்களைக் கட்டுகிற நேரத்தில் முதல்வராக இருந்த அண்ணா அவர்கள்,பொதுப் பணித்துறை அமைச்சராக இருந்த என்னை டெல்லிக்கு அனுப்பினார். மத்திய அமைச்சர்கள் முன்னிலையில் நானும் அப்போது கர்நாடக முதல்வராகவும் பொதுப் பணித்துறை அமைச்சராகவும் இருந்த வீரேந்திர பாட்டீல் அவர்களும் கலந்து பேசினோம். அப்போதிருந்தே பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து கொண்டே தான் இருக்கிறது. அதன் பிறகு இரு மாநிலங்களிலும் ஆட்சிகள் மாறியிருக்கின்றன. ஆனால், பேச்சு வார்த்தைகளில் மட்டும் எந்தவிதமான மாற்றங்களும் ஏற்படவே இல்லை. 75 – ஆம் ஆண்டு இறுதியில் பேச்சு வார்த்தை முடிந்து கையெழுத்தாகிற ஒரு நிலையில், சில 'டெக்னிகல் பாயிண்ட்ஸ்' காரணமாக நாங்கள் கையெழுத்திட மறுத்துவிட்டோம். இதற்கிடையில் தி.மு.க. அரசு வழக்கும் தொடுத்தது. அந்த வழக்கு பேச்சு வார்த்தைக்கு இடையூறாக இருக்கும் என்று இந்திரா அம்மையார் சொன்னதால் அதை வாபஸ் வாங்கினோம். ஆயினும் பேச்சு வார்த்தைகள் மூலமாகத் தீர்வு காண முடியவில்லை. அதனால்தான்

அப்பிரச்னையை நடுவர் தீர்ப்புக்கு விட வேண்டுமென்று இப்போது மத்திய அரசிடம் வலியுறுத்திக் கூறியுள்ளோம். இதற்கிடையில் மழையின் கருணையினால் காவிரி நீர் பெறுகிறது. மழை நீர் அதிகமாகும் போது மேட்டூருக்குத் தண்ணீர் வருகிறது. அதுவும் குறைகிறபோது நாம் அவ்வப்போது கர்நாடக அரசுக்கு வேண்டுகோள்விடுத்து நீரைப் பெற்றுக் கொண்டிருக்கிறோம். இந்த அரசு விவசாயிகளின் சார்பான அரசுதான் என்பதில் சந்தேகமில்லை.

கல்கி: கேரள மாநிலத்தில் மேற்கு நோக்கிப் பாய்கிற ஆறுகளின் தண்ணீர் அங்கே வீணாகிறது. அதைத் தமிழகத்திற்குத் திருப்பி விட்டால் பயனுள்ளதாக இருக்குமென்று சொல்கிறார்களே?

முதல்வர்: சுலபமாகச் சொல்ல முடிகிறது. ஆனால், அந்தத் திட்டத்திற்காகும் செலவுகளைக் கணக்கிட்டால் அது சாதாரணமானதல்ல. அதேபோல் கங்கை — காவிரி இணைப்புத் திட்டமும் சொல்வதற்குச் சுலபமாக இருக்கிறது. கே. எல். ராவ் இருக்கும் போது அவரிடம் அதுபற்றிக் கேட்டேன். என்னையும், கேரள, கர்நாடக முதல்வர்களையும் அவர் தமது வீட்டுக்கே அழைத்து அதுபற்றிக் கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் விளக்கினார். கங்கை — காவிரி இணைப்புத் திட்டத்தில் எத்தனை இடங்களில் பம்பிங் ஸ்டேஷன்களை அமைக்க வேண்டும் என்பதையெல்லாம் விளக்கி, முதல் பம்பிங் ஸ்டேஷனுக்கே இப்போது இந்தியா முழுவதும் பயன்படுகிற மின்சாரத்தின் அளவு தேவைப்படும் என்றார்! அப்படியானால், அதை நீண்ட நெடுங்காலத் திட்டமாக வைத்துக் கொண்டு, கோதாவரியையும், காவிரியையும் இணைக்கும் திட்டத்தைச் செயல்படுத்தலாமே என்றேன். அவரும் யோசிக்கலாம் என்றார்.

கல்கி: இப்போது கர்நாடகத்திலும் ஆந்திராவிலும் ஏற்பட்டுள்ள ஆட்சி மாற்றங்களால் காவிரி நதிநீர்ப் பிரச்னையிலும் தெலுங்கு கங்கா திட்டத்திலும் ஏதாவது தடங்கல் ஏற்படுமென்று நினைக்கிறீர்களா?

முதல்வர்: அதனால் ஒரு தடங்கலும் இல்லை. தெலுங்கு கங்கா திட்டத்திற்கு எந்த விதமான இடையூறும் இருக்காது என்று ஆந்திர முதல்வர் சென்னா ரெட்டி கூறியிருக்கிறார். நானும் மகிழ்ச்சி தெரிவித்துள்ளேன். கர்நாடக முதல்வர் வீரேந்திர பாட்டீலும் பேச்சு வார்த்தைக்குத் தயாராய் இருக்கிறார். நானும் பேச்சு வார்த்தையை வேண்டாம் என்று கூறவில்லை. வரவேற்றிருக்கிறேன். ஆனால் நடுவர் தீர்ப்புக்கு விடும் முயற்சியும் ஒருபுறம் நடந்து கொண்டே இருக்கட்டும் என்று சொல்லியிருக்கிறேன்.

கல்கி: இத்தனை சாதனைகள் செய்திருக்கிறீர்கள். நீங்கள் ஆட்சிப் பொறுப்பேற்றதும் கோப்புகள் வேகமாக நகர்ந்தன என்பதும் உண்மைதான். அப்படியிருந்தும் கடந்த நாடாளுமன்றத் தேர்தலில் தி.மு.க. ஓரிடத்தில் கூட வெற்றிபெற முடியாமல் போனதற்கு என்ன காரணம்?

முதல்வர்: (சிரிக்கிறார்) காந்தியடிகள் நல்லவர்தான். ஆனால் சுட்டு விட்டார்களே! (மீண்டும் சிரிக்கிறார்).

**கல்கி: காந்தியடிகளைச் சுட்டது ஒருவர் தான். ஆனால், தி.மு.க. வின் தோல்விக்கு யாரோ ஒருவர் வாக்களிக்காமல் போனதல்லவே காரணம்!**

முதல்வர்: தமிழகத்தில் மட்டுமல்ல; தென் பிராந்தியம் முழுமைக்குமே இ. காங்கிரஸால் மட்டும்தான் மத்தியில் நிலையான ஆட்சியை அமைக்க முடியும் என்கிற நம்பிக்கை ஓர் உருவில் அமைந்து விட்டதுதான் காரணம். இப்பொழுது மாத்திரமல்ல; 77 — இல் ஜனதாவுக்கு — மொரார்ஜிக்கு ஆதரவாக வட மாநில மக்கள் வாக்களித்த போது தென் மாநிலங்கள் இ. காங்கிரஸுக்கு ஆதரவாகவே இருந்தன.

கல்கி: கடந்த நாடாளுமன்றத் தேர்தலில், 'இது எனக்கும் கருணாநிதிக்கும் இடையிலான போட்டிதான். தி. மு. க. ஆட்சி மீண்டும் தொடரக் கூடாது என்பதற்காக எங்களுக்கு வாக்களியுங்கள்' என்று ஜெயலலிதா பிரசாரம் செய்தார். அவர் பிரசாரத்தை அப்படியே தமிழக மக்கள் ஏற்றுக் கொண்டு வாக்களித்தது போலல்லவா இருக்கிறது?

முதல்வர்: அந்த அம்மாள் சொன்னதை தமிழக மக்கள் ஏற்றுக் கொண்டார்களோ இல்லையோ கல்கி பத்திரிகை அப்படியே ஏற்றுக் கொண்டிருக்கிறதே! (சிரிக்கிறார்). 'ஜெயலலிதாவுக்குத் தி. மு. க. செய்த கொடுமைகள்' என்று கல்கி தலையங்கத்தில் குறிப்

---

**நண்பர்: உங்க படத்துக்கு ஏதோ பரிசுப் போட்டி அறிவிச்சிருக்கீங்களாமே, என்ன, அது?**

**தயாரிப்பாளர்: என்னோட படத்தின் கதை என்னன்னு யார் கண்டுபிடிச்சுச் சொல்றாங்களோ, அவர்களுக்குப் பரிசு ஆயிரம் ரூபாய்!**

**— சத்தி ஏ. ஜே. ஜப்பார்.**



பிட்டிருக்கிறீர்கள். நாங்கள் என்ன கொடுமைகள் செய்தோம்? சட்டசபையில் நடந்ததை அவர்கள் படமெடுத்தே வைத்திருப்பதாகச் சொன்னார்கள். சரி, போட்டுக் காட்டுங்கள் என்றோம். எங்கே போட்டுக் காட்டினார்கள்? ஏனெனில் அவர்கள் சொன்னது போல் அங்கு ஏதும் நடக்கவில்லை. ஒரு முதலமைச்சர் பட்ஜெட் படிக்கிற போது, அதைப் பிடுங்குவதும் கிழிப்பதும், அவருடைய கண்ணாடி கீழே விழுந்து நொறுங்குவதும் வேறு எங்காவது நடந்திருக்கிறதா? அதெல்லாம் உங்களுக்குப் பெரிதாகப் படவேயில்லை. ஒரு தலைவன் சட்டசபையில் தாக்கப்படுகிற போது, அவனுடைய தொண்டர்கள் அதைப் பார்த்துக் கொண்டிருப்பார்கள் என்று நீங்கள் நினைத்தீர்களேயானால் — அது நீங்கள் போற்றுகிற ராஜாஜி, காமராஜர் போன்ற தலைவர்களுக்கு இப்படியொரு நிலை ஏற்பட்டிருந்தால் தான் அதை நீங்கள் முழுமையாகப் புரிந்து கொண்டிருக்க முடியும்.



"இந்த மேடையில் எனக்கு... கேவலம் ஒரு மாலையோ, ஒரு துண்டோ கூட அணிவிக்கவில்லை என்பதிலிருந்தே விலைவாசிகள் எல்லாம் இந்த ஆட்சியில் எவ்வளவு ஏறியிருக்கின்றன என்று உணரலாம் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்..."

— காஞ்சி எஸ். ஷைபுதீன்.

கல்கி: ஜெயலலிதா செய்ததெல்லாம் நியாயம் என்று நாங்கள் எழுதவில்லையே!

முதல்வர்: நாங்கள் அவருக்கு ஒரு கொடுமையும் செய்யவில்லை என்பதே உண்மை. அவருடைய ராஜினாமாக் கடித விஷயத்தில் கூட நாங்கள் மிகவும் கண்ணியமாகவே நடந்து கொண்டோம். அவரைக் கொடுமைப்படுத்துவது எங்கள் நோக்கமாக இருந்தால் — அவரே தம் கைப்பட எழுதிய ராஜினாமாக் கடிதத்தை உடனே ஏற்குமாறு சபாநாயகரிடம் வற்புறுத்தி ஏற்பாடு செய்திருக்கலாமே? நாங்கள் அப்படிச் செய்யவில்லை. சபாநாயகர் அந்த அம்மாளிடம் விளக்கம் கேட்டார். அதன் பிறகு அந்த அம்மாள் அதைத் திரும்பப் பெற்றுக் கொள்ளச் சபாநாயகர் வாய்ப்பும் அளித்தார்.

கல்கி: இந்தச் சம்பவங்களையெல்லாம் மக்கள், தி.மு.க. வின் மேல் வைத்திருந்த நம்பிக்கையின் மேல் படிந்த கறைகள் என்று சொல்லலாமா?

முதல்வர்: கல்கி போன்ற பத்திரிகைகளே நடந்த உண்மைகளை நம்பாமல் செய்த பிரசாரத்தின் காரணமாகத்தான் மக்கள் திசை திருப்பப்பட்டு விட்டார்கள் என்பது என் கருத்து.

கல்கி: ஜெயலலிதா ஒரு பெண் என்பதால் அவர் சொன்னது எடுபட்டதாகக் கொள்ளலாமா?

முதல்வர்: பெண் என்றால் எந்த வேஷம் வேண்டுமானாலும் போடலாம் என்று அர்த்தமா? நான் அன்று சட்டசபையில் படித்த பட்ஜெட்டை அ.தி.மு.க. எம்.எல்.ஏ. பிடித்து இழுக்கிற படம் என்னிடம் இருக்கிறது. அதை நமது ஜனாதிபதியிடமும், அன்றையப் பிரதமர் ராஜீவ் காந்தி அவர்களிடமும் காட்டியிருக்கிறேன்.

கல்கி: பின் ஏன் அன்று எழுதிய பத்திரிகைகள் — ஹிந்து உட்பட அனைத்துமே அப்படி எழுதின?

முதல்வர்: அப்போது அந்த அம்மாள் திட்டமிட்டுத் தலைவிரி கோலமாக வெளியில் வந்ததைப் பார்த்து அப்படி எழுதியிருக்கக் கூடும்.

கல்கி: அன்று நடந்த சட்டசபை விவகாரத்தில் சம்பந்தப்பட்டதாகக் கூறப்படும் அமைச்சர் துரைமுருகனை ராஜினாமாச் செய்யச் சொல்லியிருந்தால் தி.மு.க. வின் மதிப்பு உயர்ந்திருக்குமே!

முதல்வர்: அவர் அதில் சம்பந்தப்படவே இல்லை. அவர் இருந்த தொலைவே வேறு. எல்லாம் இவர்கள் கட்டிவிட்ட கதையே தவிர, உண்மை அல்ல.

கல்கி: முன்பு அ.தி.மு.க. விலிருந்து காளிமுத்து போன்றவர்கள் தி.மு.க. வுக்கு வரத் தயாராய் இருந்த போது, செயற்குழுதான் அதுபற்றி முடிவெடுக்க வேண்டும் என்றீர்கள். இப்போது ராகவானந்தம் திடீரென்று தி.மு.க. வில் சேர்ந்திருக்கிறாரரே?

முதல்வர்: ராகவானந்தம் திடீரென்று வந்து விடவில்லை. கடந்த செயற்குழுவில் எடுக்கப்பட்ட முடிவின்படி அவரை தி.மு.க. ஏற்றுக் கொண்டிருக்கிறது.

கல்கி: மற்றவர்கள் அ.தி.மு.க. விலிருந்து வந்தாலும் சேர்த்துக் கொள்வீர்களா?

முதல்வர்: அது பற்றி அவ்வப்போது சிந்தித்து முடிவெடுக்கப்படும்.

கல்கி: நீங்கள் இப்போது ராகவானந்தத்தை பிளாக்மெயில் செய்துதான் தி.மு.க. வுக்குள் இழுத்திருக்கிறீர்கள் என்று அ.தி.மு.க.வினர் சொல்கிறார்களே?

முதல்வர்: (சிரிக்கிறார்) நீங்கள் இது



"இந்த ஆஸ்பத்திரியில் மட்டும் ஒரு ஸ்பெஷல் வசதி உண்டு."

"என்ன அது?"

"எக்ஸ்ட்ரா கட்டணம் கொடுத்தால் சினிமாவில் வர்ற மாதிரி நர்ஸுகளுடன் டூயட் பாடலாம்!"

— கீழை. அ. கதிர்வேல்.

போன்ற கேள்விகளைக் கேட்பீர்கள் என்றே நான் எதிர்பார்க்கவில்லை. கல்கியில் நல்ல விஷயங்களை — நாட்டுக்குத் தேவையான விஷயங்களைத்தான் கேட்பார்கள் என்று நான் நினைத்து அதற்குத் தயாராய் இருந்தேன்! (சிரிக்கிறார்)

கல்கி: இதுபோன்ற சில துணைக் கேள்விகளைத் தவிர்க்க முடியவில்லை. (நாமும் சிரிக்கிறோம்).

முதல்வர்: (சிரித்துக் கொண்டே) கேளுங்கள்... கேளுங்கள்...!

கல்கி: ஆட்சியில் கட்சிக்காரர்களின் தலையீடு இருக்காது என்று தெளிவாகக் கூறியிருக்கிறீர்கள். கட்சியின் பெயரைப் பயன் படுத்திக் கொண்டு அலுவலகங்களில் தலையிடும் சில விஷமிகளைப் பற்றியும் அவ்வப்போது முரசொலியில் வெளியிட்டு எச்சரிக்கை செய்கிறீர்கள். ஆயினும், உயர் போலீஸ் அதிகாரியான ரங்கசாமி டி.ஜி.பி. பதவியிலிருந்து மாற்றப்பட்டதற்குக் கட்சிக்காரர்கள் அவர் மீது சொன்ன புகார்கள் தான் காரணம் என்று சொல்லப்படுகிறதே?

முதல்வர்: அது உண்மையே அல்ல. தகுதிகளின் அடிப்படையிலும் தேவைகளை அனுசரித்தும்தான் போலீஸ் இலாக்காவில் பதவி மாற்றங்கள் செய்யப் படுகின்றன; பதவி உயர்வுகளும் அளிக்கப் படுகின்றனவேயொழிய வேறு காரணங்களால் அல்ல.

கல்கி: முன்பு மத்தியில் ஆட்சிப் பொறுப்பேற்ற ஜனதா அரசு, ஒற்றுமையின்மையின் காரணமாகத் தொடர்ந்து பொறுப்பில் இருக்க இயலாமல் போனது. அதனால், தி.மு.க., மீண்டும் மத்தியில் நிலையான ஆட்சி வேண்டுமென்பதற்காக இ. காங்கிரஸை ஆதரித்தது. அதுபோல், மத்தியில், பழைய சூழ்நிலை — உருவாகக் கூடாது — ஒருவேளை உருவாகிவிட்டால், மீண்டும் நிலையான ஆட்சிக்காகத் தி.மு.க. இ. காங்கிரஸை ஆதரிக்கும் வாய்ப்பு உள்ளதா?

முதல்வர்: தேசிய முன்னணி என்பது தி.மு.க. வும் ஓர் அங்கம் பெற்று உருவான ஒன்று. எனவே, தேசிய முன்னணிக்குண்டான வாழ்வு, தாழ்வு எல்லாவற்றிலும் நாங்கள் இருப்போம். அதில் மாற்றத்திற்கே இடமில்லை. தேசியமுன்னணித்தலைவர்கள் தி.மு.க. வின் கருத்துக்குப் புறம்பான அல்லது தி.மு.க. வின் தனித்தன்மைக்கு எதிராக முடிவெடுத்தால்தான் அதிலிருந்து நாங்கள் விலகுவோமே தவிர, வாழ்வு, தாழ்வுகளில் தொடர்ந்து பங்கேற்போம்.

கல்கி: பாரதீய ஜனதா மற்றும் கம்யூனிஸ்ட் கட்சிகளின் ஆதரவு இல்லையென்றால் மத்தியில் தேசிய முன்னணி ஆட்சியே இல்லை. அப்படியிருந்தும் கூட அவர்கள் தங்கள் ஆதரவை — மத்திய அமைச்சரவையில் பங்கேற்காமல் — வெளியிலிருந்தே தருகிறார்கள். இந்த சூழ்நிலையில், ஓரிடம் கூடப் பெறாத தி.மு.க. தேசிய முன்னணி ஆட்சியில் பங்கு பெற்றிருப்பதென்பது — ஒரு புறம் தமிழர் ஒருவர் மத்தியில் கேபினட் அமைச்சராக இருக்கிறார் என்று பெருமைப் பட்டாலும் மறுபுறம் கொஞ்சம் கூச்சமாகவும் இருக்கிறது. அதனால், தி.மு.க. வும் பாரதீய ஜனதா மற்றும் கம்யூனிஸ்ட் கட்சிகளைப் போல தேசிய முன்னணிக்கு வெளியிலிருந்தே ஆதரவு தருவதாகச் சொல்லியிருந்தால் இன்னும் பெருமையாக இருந்திருக்குமோ என்று தோன்றுகிறதே?

முதல்வர்: இந்த இடத்தில் ஓர் உண்மையை மறந்து விடுகிறீர்கள். பாரதீய ஜனதாவும், கம்யூனிஸ்ட் கட்சிகளும் தேசிய முன்னணியில் அங்கம் வகிக்கவில்லை. ஆனால், தி.மு.க., தெலுங்கு தேசம், அசாம் கன பரிஷத் போன்றவையெல்லாம் அதில் அங்கம் வகிக்கின்றன. அதனால்தான் தி.மு.க. மட்டுமின்றி தெலுங்கு தேசம்; நாடாளுமன்றத் தேர்தல் ஒத்தி வைக்கப்பட்ட அசாம் மாநிலத்திலிருந்தும் அசாம் கன பரிஷத் கட்சி ஆகியவையும் தேசிய முன்னணி அமைச்சரவையில் இடம் பெற்றிருக்கின்றன.

கல்கி: இலங்கைப் பிரச்னையில், எல்.டி.டி.ஈ. யோடு பேச்சு வார்த்தை நடத்தியவுடனேயே 'என்னைப் பொறுத்தவரை என் பணி முடிந்துவிட்டது' என்று சொன்னீர்கள். அவர்களோடு மட்டும் பேச்சு வார்த்தை நடத்தினால் போதுமா?

முதல்வர்: இலங்கைப் பிரச்னையைப் பொறுத்தமட்டில் எல்லா விஷயங்களையும்

நான் வெளிப்படையாகப் பேச முடியாது. கூடாது. இதனால் பத்திரிகைச் செய்திகளில் சில குழப்பங்கள் நேர்கின்றன. எல். டி. டி. ஈ.யோடு பேச்சு வார்த்தை நடத்திக் கொண்டிருந்த அதே சமயத்தில் நான் மற்ற போராளிக் குழுக்களோடு தொடர்பு கொண்டிருக்காமல் இல்லை. மேலும் நான் தில்லியில் விடுத்த அறிக்கையோடு, சென்னையில் விடுத்த அறிக்கையையும் ஒன்றோடொன்று தொடர்புபடுத்திப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்தால் நான் சொன்னதன் அர்த்தம், எல். டி. டி. ஈ. யோடு நடத்த வேண்டிய எனது பேச்சு வார்த்தைப் பணி முடிந்துவிட்டது; மற்றதற்கு மத்திய அரசுதான் அடுத்த கட்டப் பணியைத் துவங்க வேண்டும் என்பது புலனாகும்.

கல்கி: இலங்கைத் தமிழர் பிரச்னைக்குப் பேச்சு வார்த்தை மூலமே தீர்வு காண முடியுமென்று நம்புகிறீர்களா?

முதல்வர்: முடியுமா முடியாதா என்பது ஒருபுறம். நம்மால் ஆனதை முயற்சி செய்கிறோம். அங்கு நடப்பது சகோதர யுத்தம். அதைத் தவிர்க்க வேண்டும் என்பதே எனது ஆசை.

கல்கி: தனித் தமிழீழம்தான் இலங்கைப் பிரச்னைக்கான தீர்வு என்று தி.மு.க. கூறி வந்திருக்கிறதே?

முதல்வர்: இலங்கைத் தமிழர் பிரச்னையில் தி. மு. க. என்றைக்குத் தலையிட்டதோ, அன்றிலிருந்து இன்று வரை, தி. மு. க. தனது தனிப்பட்ட முடிவுகள் எதையும் இலங்கைத் தமிழர் மீது திணித்ததில்லை. அவர்கள் தங்கள் பிரச்னைகளுக்கான தீர்வு எது என்று ஒட்டுமொத்தமாக முடிவு எடுக்கிறார்களோ, அதையே தி. மு. க. ஆதரித்தது; ஆதரிக்கிறது.

கல்கி: மது விற்பனையில் குறிப்பிட்ட சிலருக்கு மட்டுமே சென்று கொண்டிருந்த வருமானத்தை அரசுக்குத் திருப்பி விட்டிருப்பதாகச் சொன்னீர்கள். மது விலையும் ஏறியிருப்பதாகச் சொல்கிறார்கள். ஆக, அரசுக்கு அதன் மூலம் வருமானம் அதிகரித்திருக்கிறது. இது ஒருபுறமென்றால், மறுபுறம் இலவசத் திட்டங்களினாலேயே வருமானங்களெல்லாம்செலவாகி,நீண்டகாலத் திட்டங்களுக்கு நிதி வசதியில்லாமல் போய் விடுமோ என்கிற சந்தேகம் வருகிறது!

முதல்வர்: நீண்ட கால வளர்ச்சித் திட்டங்களைக் கைவிட்டுவிட்டு, ஒருபோதும் இலவசத் திட்டங்களைச் செயல்படுத்தவில்லை. அவை ஒருபுறம் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. நான் இந்தப் பேட்டியின் ஆரம்பத்தில் குறிப்பிட்டவை சில எடுத்துக்காட்டுகள் மட்டுமே. அவை தவிரவும் ஏராளமான தொழில் வளர்ச்சித் திட்டங்கள் உருவாகி வருகின்றன. இவை செவ்வனே நிறைவேறத் தேவையான நிர்வாகச் சீரமைப்புக்களும் செய்யப்பட்டுள்ளன. சமூக நலத் திட்டங்களும் நிறைவேறி வருகின்றன. (நாற்பது பக்கங்கள் அடங்கிய முழுப் பட்டியலைத் தருகிறார்.)

கல்கி: அரசு ஊழியர்களுக்குச் சம்பளம் உயர்த்தியிருக்கிறீர்கள். ஏறத்தாழ 12 லட்சம் பேர்தான் இந்த ஊதிய உயர்வால் பயனடைந்திருக்கிறார்கள். மீதமுள்ள — நிலையான வருமானமே இல்லாத மக்கள் அதனால் அதிருப்தி கொண்டதுதான் தி.மு.க.வின் நாடாளுமன்றத் தோல்விக்குக் காரணமாக இருக்குமோ என்றும் தோன்றுகிறது!

முதல்வர்: இதை நீங்கள் உணர்வதைவிட அரசு ஊழியர்கள் உணரட்டும். ஆனால், மத்திய அரசு ஊழியர்களுக்குச் சமமான சம்பளம் தேவையென்று தமிழக அரசு ஊழியர்கள் கோரிக்கை வைத்த போது, தி.மு.க. அதை ஆதரித்தது. அதனால் நாங்கள் ஆட்சிப் பொறுப்புக்கு வந்த போது அதை நிறைவேற்றியிருக்கிறோம்.

கல்கி: நீங்கள் கொடுத்த தேர்தல் வாக்குறுதிகளில் 75 சதத்தை நிறைவேற்றியிருப்பதாகச் சொல்கிறீர்கள். ஆனால், கடந்த நாடாளுமன்றத் தேர்தலுக்கு முன்பு, அத்தியாவசியப் பொருள்களுக்காக மக்கள் அலைய வேண்டிய நிலை ஏற்பட்டதே?

முதல்வர்: நான் முன்பே பலமுறை இது பற்றிச் சொல்லியிருக்கிறேன். கடந்த ஜனவரியில் சட்டமன்றத் தேர்தல் நடப்பதற்கு முன்பு, 88 டிசம்பரில் தமிழகத்திற்கு மத்திய அரசு லட்சத்து ஐயாயிரம் டன் அரிசி வழங்கியது. நான் பதவியேற்ற மறுநாளே அதை நாற்பதாயிரம் டன்னாக — வேண்டுமென்றே — தி. மு. க. அரசுக்கு அரசியல் ரீதியானதொரு நெருக்கடியை ஏற்படுத்த வேண்டுமென்றே — அப்போதைய ராஜீவ் அரசு குறைத்து விட்டது. அதில் பத்தாயிரம் டன் உயர்த்துவதற்கு நாங்கள் பட்ட பாடு கொஞ்ச நஞ்சமல்ல; பி. ஹெச். பாண்டியன் உச்சநீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்த பிறகுதான் உயர்த்தினார்கள். அதுவும் ஒரு மாதம்தான் கொடுத்தார்கள். இந்த நிலையில் தி. மு. க. அரசும், மத்திய அரசிடம் சரணாகதி அடைந்து அரிசி பெறக் கூடாதா என்றும் சிலர் எதிர்பார்க்க ஆரம்பித்தார்கள். ஆனால், ராஜாஜி, காமராஜர், அண்ணா போன்ற தலைவர்கள் மத்திய அரசிடம் உரிமைகளைத்தான் கேட்டார்களே தவிர, அடிமைப்படவில்லை. தி. மு. க. வே உரிமைகளைப் பெறுவதற்காக ஆரம்பிக்கப்பட்ட கட்சி. இந்த நிலையில், உரிமைகளைப் பெறுவதற்கான விலை, இதுபோன்ற தோல்விகள்தான் என்றால், அந்த விலையைத் தருவதற்கு நாங்கள் எப்போதும்தயாராகவே இருக்கிறோம்.

கல்கி: நாடாளுமன்றத் தேர்தலின் போது, 'இந்த ஆட்சி தொடர வேண்டுமானால் உதயசூரியனுக்கு வாக்களியுங்கள்' என்று நீங்கள் சொன்னீர்கள்...

முதல்வர்: இந்த ஆட்சிதான் தொடர்

கிறதே! (சிரிக்கிறார்).

கல்கி: நீங்கள் உதய சூரியனுக்கு வாக்களிக்கச் சொன்னீர்கள்!

முதல்வர்: பின்னே... (சிரிக்கிறார்) உதய சூரியனுக்கு வாக்களிக்க வேண்டாமென்றா நான் பிரசாரம் செய்ய முடியும்! (சிரிக்கிறார்). நீங்கள் ஒரு வரியை மட்டும் எடுத்து வைத்துக் கொண்டு பார்க்கக் கூடாது. அவர்கள் நாடாளுமன்றத் தேர்தல் சட்டமன்றத்தைப் பாதிக்கும் என்று பிரசாரம் செய்தார்கள். நான், அது சட்டமன்றத்தைப் பாதிக்காது. ஏனெனில், மீண்டும் மத்தியில் ராஜீவ் ஆட்சி வரப் போவதில்லை என்று சொன்னேன்.

கல்கி: போடியில் கலவரம் நடந்த போது, எல்லா அரசியல் தலைவர்களுமே வெளியிலிருந்து கொண்டுதான் அறிக்கைகள் விட்டார்களே தவிர, சம்பந்தப்பட்ட இடத்திற்கு யாருமே செல்லவில்லை. நீங்கள் கூட கோவையில் ஸ்டாலின் நடத்திய இளைஞர் அணிப் பேரணியில்தான் கலந்து கொண்டிருந்தீர்கள். இதைக் கல்கியில் எழுதிய தலையங்கத்திலேயே குறிப்பிட்டிருக்கிறோம்!

முதல்வர்: கல்கியில் வெளியான அந்தத் தலையங்கத்தை நானும் படித்தேன். முதுகுளத்தூரில் முன்பு மூன்று மாதம் கலவரம் நடந்தது. காமராஜர் அப்போது அங்கு சென்றாரா? செல்லவில்லை. காரணம், கலகம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் போது தலைவர்கள் அங்கு செல்வது நல்லதல்ல. போடி கலவரத்தின் போது, நான் உடனடியாக அமைச்சர்கள் பொன் முத்துராமலிங்கம், தங்கவேலு ஆகியோரை அனுப்பி வைத்தேன். அவர்களைக் கூட போலீஸார் மதுரையிலும் திண்டுக்கல்லிலும்தான் தங்கச் செய்தார்களே தவிர, கலவரம் நடந்த இடத்திற்கு அவர்களை அனுமதிக்கவில்லை. இரண்டு நாட்கள் கழித்தே அவர்களை அனுமதித்தார்கள். அப்படிப்பட்டதொரு சூழ்நிலையில் எப்படி நானே அங்கு உடனே செல்ல முடியும்? சில நாட்களில் நானும் சென்றேன்.

கல்கி: மத்தியில் தேசிய முன்னணி ஆட்சி நடக்கின்ற புதிய சூழலில் இந்திப் பிரச்னையில் தி.மு.க.வின் நிலை என்ன?

முதல்வர்: எப்போதும் உள்ள நிலைதான். அதில் இப்போதும் மாற்றமில்லை.

கல்கி: இப்போதெல்லாம் பார்லிமெண்டில் இந்தியில்தான் பேசுகிறார்கள். முன்பு போல் ஆங்கிலத்தில் பேசுவதில்லை என்று இ. காங்கிரஸ் எம்.பி. குப்புசாமி பேசியிருக்கிறாரே?

முதல்வர்: ஆங்கிலம் தெரியாதவர்கள் இந்தியில் பேசுகிறார்கள். அதில் என்ன தவறு? அப்படியென்றால் மறைமலை நகரில் நடந்த இ. காங்கிரஸ் மாநாட்டில் பலரும் இந்தியில் தானே பேசினார்கள். அப்போது அந்த எம்.பி. எங்கே போயிருந்தார்? வெளிநாட்டுக்கா போயிருந்தார்?

கல்கி: அண்மையில் திருச்சியில் நடந்த பிராமணர் சங்க மாநாட்டின் போது தி.க. ஊர்வலம் நடத்தியது. அப்போது இருசாராருக்கும் இடையில் மோதல் நடந்திருக்கிறது. இந்த எதிர்மறைப் போக்கு வளராமல் இருப்பதற்கு முதல்வர் என்னும் முறையில் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

முதல்வர்: சிறுபான்மையினருக்குப் பாதுகாப்புத் தேவை. அதே சமயத்தில் சிறுபான்மையினரும் அடக்கத்தோடு நடந்து கொள்ள வேண்டும்.

கல்கி: அண்மையில், பி.டி.ஐ. செய்தி ஸ்தாபனத்தை நீங்கள் டெலிபோனில் பேசி மிரட்டியதாகச் செய்தி வெளியானது. அதை நம்பவும் முடியவில்லை; நம்பாமலிருக்கவும் முடியவில்லை....

முதல்வர்: உங்களுக்கே தெரியும்... நான் அப்படியெல்லாம் நடந்து கொள்வேனா? நீங்களே நினைத்துப் பாருங்கள். அது மாதிரி அவர்களுக்கு ஒரு போன் வந்திருக்கலாம். அதை நான் மறுக்கவில்லை. காரணம், என் வீட்டிற்குக் கூட இரவில் வரும் போன்களைப் பெண்கள் எடுக்கும் போது சில சமயங்களில் கன்னாபின்னாவென்று எதிர்முனையில் திட்டுகிறார்களென்று என்னிடம் சொல்லி அழுதிருக்கிறார்கள். அப்படி பி.டி.ஐ. செய்தி ஸ்தாபனத்திற்கும் போன் வந்திருக்கலாம். ஆனால், அவர்கள் உடனடியாக எனக்கு போன் செய்து விசாரித்திருக்கலாமே! அப்படிச் செய்யாததுதான் எனக்கு ஒருபுறம் ஆச்சரியமாகவும் மறுபுறம் வருத்தமாகவும் இருக்கிறது.

அட்டை வண்ணப்படமும், படங்களும்: 'சுபா' சுந்தரம்

---

அடுத்த இதழில்...

## ஆந்திராவில் நக்ஸலைட்டுகள்

— நேரடி ரிப்போர்ட்





# இதயத்தை இழந்தவன்

சங்க காலந்தொட்டே காதலுக்கு நிலவினைத் தூது அனுப்புவது கவிஞர்கள் மரபு. அவ்வாறு தூது அனுப்புகையில் காதலியின் சகோதரியாக நிலவினைப் பாவித்துப் பாடுகிறார் ஒரு கவிஞர். ''என் அருமைக் காதலிக்கு வெண்ணிலாவே, நீ இளையவளா மூத்தவளா'' என்ற கேள்வியுடன் தொடங்குகிறார், காலஞ்சென்ற பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம், அந்தத் திரைப்படப் பாடலில்.

''அஞ்சிடத் தேவையில்லை
வெண்ணிலாவே
இது அவன் தந்த பாடமடி
வெண்ணிலாவே''

என்ற வரிகளில் கவிதை நயம் வண்ணம் காட்டுகிறது.

காதலியின் பிரிவால் வருந்தும் காதலன், தன் இதயம் அவளிடம் இருப்பதால்தானே தனக்கு இந்த விரக வேதனை என எண்ணி, முதலில் நிலவினைப் புகழ்ந்து கூறி, பின் மெதுவாக விஷயத்துக்கு வருகிறான்.

''நிலவே! கள்ளங்கபடமில்லாத என் இதயம் அந்தக் கள்ளியாம், எனது காதலியிடம் இருக்குதடி. நீ ஏற்கெனவே என்னை வஞ்சித்த அந்த வஞ்சிதனை அறிவாய். ஆகையால் அதை வாங்கி வந்து தந்து விடு. நிச்சயம் நீ கெஞ்சிக் கேட்டால் அவள் தர மாட்டாள். ஆகவே கேட்காமல் பறித்து வந்து தந்து விடு!'' என்கிறான்.

நிலவு அஞ்சுகிறதாம். 'என்னதான் சகோதரியென்னும் திருடுவதா? நானா? இது நியாயமா?' என்று யோசிக்கிறதாம்!

இங்குதான் கவிஞர் குறும்பு கொப்பளிக்கக் கூறுகிறார்: ''நிலவே, நீ அஞ்சிடத் தேவையில்லை! தயங்காமல் பறித்து வா! ஏன் எனில் இது முன்னர் அவளே கற்றுத் தந்த பாடம்தான்! எப்படி? என் இதயத்தை என்னிடமிருந்து கேட்காமல்தானே தட்டிப் பறித்து விட்டாள் அந்தப் பட்டுப்பூச்சி? அது பறி போனதால்தானே எனக்கு இந்த நிலை? ஆகவே அந்தப் பாடத்தை, அவளுக்கே திருப்பிப் படி! அவளைக் கேட்காமலே பறித்து வந்து தா!''

புரட்சிகரமான பாடல்கள் எழுதிப் புகழ் பெற்ற பட்டுக்கோட்டையாரின் காதல் பாடலும் புதுமையாக, புரட்சிகரமானதாகத் தானே இருக்கும்!

திருப்பரங்குன்றம்.

—டி. கே. சுப்பிரமணியன்.

உங்களுக்காகத்தான்,
எண்ணிக்குங்க...

வி.பி.சிங்

கருணாநிதி

வரதராஜ பெருமாளுடன் பேச்சு

விடுதலைப் புலிகளுடன் பேச்சு

இதர போராளிகளுடன் பேச்சு

மேலும் போராளிகளுடன் பேச்சு

பயங்கரவாதிகள்

பாரூக்

காஷ்மீர் மாநிலம்

வி.பி.சிங்

பாரூக், விடாதே... அமுக்கு!

ம், ஒங்கும் குத்து!

மேத்தா

நாங்க எதுக்கு? நீயே சமாளிச்சுக்குவே!

குஜ்ரால்

தேர்வுக் குழு

நியூஸிலாந்துக்கு புதிய டீம்

ஆஹா, என் செலக்‌ஷன் அபாரம்...
தூள் கிளப்பிடுவாங்க!



# கல்கி

1990 ஜனவரி 21
மலர் 48 இதழ் 25
சுக்ல தை 8



## பூணூல் அறுக்கும் புண்ணியவான்கள்!

ஜாதி, மத, இன, பிரதேச அடிப்படையில் சங்கங்கள், கழகங்கள் அமைவதும், அவை அரசியலில் புகுவதும் ஜனநாயகத்தில் விரும்பத்தக்கதல்ல என்ற அடிப்படையை ஒப்புக்கொள்வோமானால், 'பிராமணர்கள் தங்களுக்கென்று சங்கம் அமைத்துக்கொள்ள வேண்டுமா? பிறர் செய்யும் தவறுகளைத் தாங்களும் செய்ய வேண்டுமா?' என்ற வினா எழுவதும், 'அவசியமில்லை' என்ற பதிலைப் பெறுவதும் தவிர்க்க முடியாததாகும்.

ஆனால் இன்றையச் சூழ்நிலை அத்தகைய லட்சிய ஜனநாயகமாக இல்லை. வன்னியர் சங்கமென்றும் நாடார் சங்கமென்றும் முஸ்லிம் லீக் என்றும் திராவிடர் கழகமென்றும் தெலுங்கு தேசமென்றும் கட்சிகள் இருக்கும் போது, சங்கம் அமைத்துக்கொள்கிற உரிமையைப் பிராமணர்களிடமிருந்து மட்டும் யாரும் பறித்து விட முடியாது. தங்களுக்கு உள்ள கருத்துக்களை மனம் விட்டுப் பேசுகிற உரிமையையும் அவர்களுக்கு யாரும் மறுத்து விட முடியாது. 'பிராமணர்களின் எண்ணிக்கைக்கு ஏற்ப அவர்களுக்கும் இட ஒதுக்கீடு செய்யுங்கள்' என்றோ, அல்லது 'வருவாய் அடிப்படையில் பிற்படுத்தப்பட்டவர்களைத் தீர்மானியுங்கள்' என்றோ அரசுக்குக் கோரிக்கை விடுக்க அவர்கள் பூரண உரிமை பெற்றிருக்கிறார்கள். இந்தக் கோரிக்கைகள் சரியா, அரசு ஏற்க வேண்டுமா என்பன வேறு விஷயங்கள். ஆனால் கோரிக்கையை முன் வைக்கும் உரிமையையே பிராமணர்களிடமிருந்து பறித்து விட எண்ணுவது மாபெரும் அநீதி. இதனை மதிப்புக்குரிய வீரமணியும் அவரது தோழர்களும் உணர்ந்து கொள்வதுடன் மாண்புமிகு தமிழக முதலமைச்சரும் புரிந்து கொள்ள வேண்டும். திருச்சியில் நடந்த பிராமணர்கள் மாநாட்டில் குண்டுராவும் குமரி அனந்தனும் வீரப்பனும் கலந்து கொண்டு பேசினார்களே என்பதால் ஆத்திரப்பட்டு, அரசியல் உள்நோக்கத்துடன் ஆட்சியில் இருப்பவர்கள் நடந்து கொள்ளக் கூடாது.

சில பிராமணர்கள் கேவலமாக நடத்தப்பட்டதும் அதை எழுதிய ஹிந்து நாளிதழ் நிருபருடைய பூணூல் அறுக்கப்பட்டதும் மன்னிக்க முடியாத குற்றங்கள். இந்தக் குற்றங்களைச் செய்தவர்களை அரசு தண்டிப்பதுடன், இதுபோன்ற செயல்களை முதல்வர் பகிரங்கமாகக் கண்டிக்கவும் வேண்டும். இதில் தவறினால் தி. மு. க. அரசு பாரபட்சத்துடன் நடந்து கொள்வதாகக் கருதப்படும்.

''சிறுபான்மையினருக்குப் பாதுகாப்புத் தேவை; அதே சமயத்தில் சிறுபான்மையினரும் அடக்கத்துடன் நடந்து கொள்ள வேண்டும்'' என்று தமிழக முதல்வர் கல்கி பேட்டியில் கூறியிருக்கிறார். நல்லது. பூணூலை அறுப்பதும் குடுமியைக் கத்திரிப்பதும் ஆணவம் இல்லையா? ''அக்கிரஹாரம் கொளுத்தப்படும்'' என்று சுவரில் எழுதி, வன்முறையைத் தூண்டுவது அடக்கம் ஆகுமா? முதல்வர் யோசிக்கட்டும். 'பூணூல் அறுக்கும் சம்பவம் நடக்கவேயில்லை' என்று வீரமணி மறுப்பதும் அதை முதல்வர் நம்புவதும் அடக்கமா?

சிலை வழிபாட்டைக் கேலி செய்யும் திராவிடக் கழகத்தினரே பெரியாருக்கும் முதல்வருக்கும் சிலை வைத்து மாலையிட்டு மரியாதை செய்து கொண்டுதானிருக்கிறார்கள். அதைக் கிண்டல் செய்ய நாம் எண்ணவில்லை. 'பிராமணர்கள் மட்டும்தானா பூணூல் அணிகிறார்கள்? பிராமணர் அல்லாதாரின் பூணூலை அறுக்கத் துணிவீர்களா?' என்று நாம் கேட்கப் போவதில்லை. 'பிறர் மரியாதையைப் பாதிப்பது சுய மரியாதை ஆகுமா?' என்று நாம் வினா எழுப்பப் போவதில்லை. 'கடவுளை நம்புகிறவன் முட்டாள் என்று பேசுகிறீர்களே; ஏசுவை நம்புகிறவன் மடையன் என்று கூறுவீர்களா?' என்று நாம் தர்க்கம் புரியப் போவதில்லை. நாத்திகம் பேச உங்களுக்கு உரிமையிருக்கிறது. உங்கள் உரிமைகளையும் உணர்வுகளையும் மதிக்கிறோம். ஆனால், 'ஆத்திகர் மனம் புண்படாத வகையில் நாத்திகம் பேசுங்கள்; பிரசாரம் பண்ணுங்கள்' என்றுதான் வேண்டிக் கொள்கிறோம்.

முன்னொரு காலத்தில் பிராமணர்களின் ஆதிக்கம் மேலோங்கி இங்கே பலர் வதைபட்டது மறுக்க முடியாத சரித்திர உண்மை. ஆனால் அந்தப் பழங் கதையைச் சுட்டிக் காட்டிக் கொண்டு, இன்று அந்தக் கொடுமைகளுடன் எவ்விதச் சம்பந்தமும் இல்லாத இளம் தலைமுறைப் பிராமணர்களைப் பழிவாங்க நினைப்பது அறியாமை.

புத்திசாலித்தனம் என்னவெனில், இன்றுள்ள பிராமணர்களிடம் வெறுப்பைக் கொட்டாமல் அன்பு செலுத்தி, அவர்களைக் கொண்டே பிற்படுத்தப்பட்ட வகுப்பினரை முன்னுக்குக் கொண்டு வர முயற்சிகள் மேற்கொள்வதுதான். பிற்படுத்தப்பட்டோரை முன்னுக்குக் கொண்டு வரும் ஆர்வம் உங்களுக்கு மெய்யாலுமே இருக்குமானால், இந்த அன்பான, ஆக்கபூர்வமான அணுகுமுறை நிச்சயம் நற்பலன் அளிக்கும். பிராமணர்கள் உங்களுக்கு முழு ஒத்துழைப்பும் தருவார்கள். முழு மனத்துடன் உழைப்பார்கள். எந்தெந்த வகையில் இதைச் செய்யலாம் என்று சிந்தியுங்கள்; நிச்சயம் வழிகள் புலப்படும். தமிழகமும் தேசமும் முன்னேறும். அமைதியும் ஆனந்தமும் நிலவும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஏழாவது இரவு

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:

13

பின்தொடர்ந்தவன், அவர்கள் இருவரும் அந்த இருண்ட சந்தினுள் திரும்பியதும் சட்டென்று நின்றான். முன்னால் சென்று கொண்டிருந்தவன் இயல்பாக நின்று திரும்பிப் பார்த்தான்.

நண்பன் மட்டும் அந்தச் சந்து முனையில் நின்று கொண்டிருக்க, அந்தப் பெண்களைக் காணாமல் திகைத்தான். வேகமாக நடந்து நண்பனை நெருங்கினான்.

அவனுடைய தலையசைவைத் தொடர்ந்து இருவரும் அந்தச் சந்தினுள் நுழைந்தார்கள். நிதான்மாக நடந்தார்கள்.

சற்றுத் தொலைவில் அந்தப் பெண்கள் நின்று கொண்டிருப்பது நிழலாகத் தெரிந்தது.

நின்றார்கள்.











கூட இருந்தவன் சற்றுத் தயங்கினான்.

சந்தேகம் ஏற்பட என்ன காரணம் என்கிற கேள்வி அவனைக் குழப்பியது. நண்பனுடைய அவசரத்தை அவனால் ஏற்க முடியவில்லை. அவன் குழம்பிக் கொண்டிருந்த போதே —

சந்தினுள் நுழைந்த மோட்டார் சைக்கிள் சட்டென நின்றது. திடுமென அதன் சப்தம் முடிவுக்கு வந்ததைத் தொடர்ந்து திரும்பிப் பார்த்த போது, தொலைவில் அதன் விளக்கொளி அணைவது தெரிந்தது.

'யார் அவன்? ஏன் நிற்கிறான்?' என்று நெஞ்சினுள் எழுந்த கேள்விகளைத் தொடர்ந்து அவன் மேலும் தயங்கினான்.

நண்பன் அவன் முதுகில் தட்டினான்.

''ம்... தயக்கம் காட்டாம நட...''

அவர்கள் விரைந்து நெருங்கிய போது, சட்டெனத் தரையிலிருந்து மாலினி எழுந்தாள். அடுத்த நொடியில் —


















அப்போது, தொலைவில் நின்றிருந்த மோட்டார் சைக்கிள் கிளம்பும் ஒலி கேட்டது. கூடவே அதன் விளக்கு உயிர் பெறுவதும் தெரிந்தது.

பார்த்துக் கொண்டிருக்கும்போதே மெதுவாக அவர்களை நோக்கி வந்தது.

அருகில் வந்து நின்றதும் அதில் அமர்ந்திருந்தவர் யார் என்பது புரிந்தது.

அவர்கள் திகைத்துப் போய் நின்றார்கள்.

தொடரும்

### மீண்டும் ஓர் அரிய வாய்ப்பு!

# ரூ. 150 பெறுமான லிப்கோ புத்தகங்கள் இலவசம்!

ரூ. 1000-ஐ எம்மிடம் முதலீடு செய்பவர்களுக்கு (இந்தியாவில் உள்ளவர்களுக்கு மட்டும்) ரூ. 150 பெறுமான அவர்கள் விரும்பும் லிப்கோ புத்தகங்கள் முற்றிலும் இலவசமாக உடனடியாக அனுப்பி வைக்கப்படும். 3 வருடங்களுக்குப் பிறகு அந்த முதலீடு ரூ. 1,350 ஆகத் திருப்பித் தரப்படும். முழு விவரங்களுக்கும், விலைப் பட்டியலுக்கும், விண்ணப்பத் தாளுக்கும் எழுதுக.

குறிப்பு: சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள எண்ணிக்கைக்குட்பட்டு முதலில் வரும் முதலீடுகளை மட்டுமே ஏற்றுக்கொள்ள இயலும்.

## பயன்தரும் லிப்கோ புத்தகங்களில் சில:

| | | ரூ. காசு |
|---|---|---|
| 1. | தமிழ்-தமிழ்-ஆங்கில அகராதி | 38.00 |
| 2. | ஹிந்தி-தமிழ் அகராதி | 30.00 |
| 3. | ஹிந்தி ஆசிரியன் | 10.00 |
| 4. | ஆங்கில ஆசிரியன் | 22.00 |
| 5. | சமைப்பது எப்படி? | 8.00 |
| 6. | குழந்தை வளர்ப்புக் கலை | 5.00 |
| 7. | இயற்கை தரும் இன்மருந்துகள் | 14.00 |
| 8. | வள்ளுவர் மொழியும் தெள்ளிய உரையும் | 5.00 |
| 9. | ஸுந்தர காண்டம் - மூலம் ஸம்ஸ்க்ருதத்தில் | 14.00 |
| 10. | ஸுந்தர காண்டம் - மூலம் தமிழில் | 14.00 |
| 11. | ஸுந்தர காண்டம் - ஸ்ரீ C.R.S. தமிழ் வசனம் | 25.00 |
| 12. | ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் - ஸ்ரீ C.R.S. தமிழ் வசனம் - 2 பாகங்களில் - 1800 பக்கங்கள் | 125.00 |
| 13. | ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீமத் ராமாயண பாராயணமும் - ஸ்தோத்ரமாலையுடன் | 16.00 |
| 14. | ஸ்தோத்ரமாலை | 5.00 |
| 15. | ஸ்ரீ வீர ஆஞ்ஜநேயர் | 4.00 |
| 16. | கம்ப ராமாயணம் - வசனம் | 15.00 |
| 17. | ரகுவம்ச மஹாகாவ்யம் - உரையுடன் | 55.00 |
| 18. | குமாரஸம்பவம் - உரையுடன் | 25.00 |
| 19. | மேக சந்தேசம் - உரையுடன் | 20.00 |
| 20. | ருது ஸம்ஹாரம் — கருத்துரையுடன் | 4.00 |
| 21. | ஸ்ரீமத் பகவத் கீதை - மூலம், தமிழில் உரையுடன் | 13.00 |
| 22. | மாங்கல்ய ஸ்தவம் | 2.00 |
| 23. | ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ஹ்ருதயம் | 1.50 |
| 24. | ஸ்ரீ நாராயண கவசம் | 2.00 |
| 25. | ஸ்ரீ வராஹ கவசம் | 2.00 |
| 26. | நாலாயிர திவ்யப் பிரபந்தம் 2 பாகங்களில் | 80.00 |
| 27. | நூற்றெட்டு ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவம் | 8.00 |
| 28. | ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் - மூலம் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் - அர்த்தத்துடன் | 15.00 |
| 29. | ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் - உரையுடன் | 48.00 |
| 30. | ஸ்ரீ தேசிகப் பிரபந்தம் - மூலம் | 8.00 |
| 31. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள்-உரையுடன் | 60.00 |
| 32. | ஸ்ரீ தேசிக ஸ்தோத்ரங்கள் - மூலம் தமிழில் | 9.00 |
| 33. | ஸ்ரீ ரங்கநாத திவ்யமணி பாதுகைகளும் ஸகல காரிய ஸித்தியும் | 3.00 |
| 34. | ஸ்ரீரங்க மாஹாத்மியம் | 8.00 |
| 35. | ஸ்ரீ குருவாயூர் அப்பன் ஸுப்ரபாதம் | 0.60 |
| 36. | ஸ்ரீ முருகமாலை | 2.00 |
| 37. | பஜ கோவிந்தம் | 2.00 |
| 38. | ஸ்ரீ மஹா பக்த விஜயம் | 20.00 |
| 39. | அபயாம்பிகை சதகம் | 8.00 |
| 40. | அபிராமி அந்தாதி - உரையுடன் | 3.00 |
| 41. | ஸ்ரீ ஸௌந்தர்யலஹரீ - உரையுடன் | 4.00 |
| 42. | ஸகல காரிய ஸித்தியும் ஸ்ரீ தேவீ பாகவதமும் | 6.00 |
| 43. | பெரிய புராணம் - சுருக்கம் | 2.50 |
| 44. | திருவிளையாடற் புராணம் - சுருக்கம் | 2.50 |
| 45. | ஸ்ரீ ஸத்யநாராயண வ்ரதம் | 2.00 |
| 46. | ஸ்ரீ லக்ஷ்மீ குபேர பூஜாக்ரமம் | 1.25 |
| 47. | குடும்ப ஜோதிடம் | 12.00 |
| 48. | நவக்ரஹ க்ஷேத்ர புராணம் | 7.20 |
| 49. | ஸ்ரீ சனிக்ரஹ சாந்தி பூஜா விதானம் | 3.00 |
| 50. | விரத பூஜா விதானம் - 36 பூஜைகள் | 12.00 |
| 51. | உங்கள் பிறந்த தேதியும் வாழ்க்கை ரகசியங்களும் | 4.00 |
| 52. | உடல் மச்சங்களும் உங்கள் வாழ்க்கை ரகசியங்களும் | 3.00 |
| 53. | திருப்புகழ் மஞ்சரி | 3.00 |
| 54. | ஆறுமுகனுக்குகந்த ஆறு படைவீடுகள் | 11.00 |
| 55. | ரிஷிகளும் கோத்ரங்களும் | 6.50 |
| 56. | ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம் | 2.00 |
| 57. | ஷட்பதீ ஸ்தோத்ரம் | 2.00 |
| 58. | கௌரீ கல்யாணம் வைபோகமே - கல்யாண, பண்டிகை, மங்கள ஹாரதி பாட்டுகள் | 8.00 |
| 59. | ராகவ யாதவீயம் | 6.00 |
| 60. | நாமக்கல் கவிஞர் பாடல்கள் | 36.00 |
| 61. | பல்லவினி — சரித்திர நாவல் | 25.00 |
| 62. | நன்னாள் அன்பளிப்பு | 10.00 |
| 63. | Idioms & Phrases | 7.00 |
| 64 | How to Cook? | 10.00 |
| 65 | Bhagavan Ramanuja | 2.50 |
| 66 | Chitra Ramayanam | 20.00 |

விவரங்களுக்கு:




## தி லிட்டில் ப்ளவர் கம்பெனி

ரங்கநாதன் தெரு, தியாகராயநகர், சென்னை - 600 017.

போன்: 441538 61 ஆண்டுகளாகப் புத்தக உலகில் பெரும் புகழ்!

# திருமணத்திற்குச் சில நிபந்தனைகள்

**சத்யா ஸ்ரீனிவாசன்**

தீர்மானமாகச் சொல்லி விட்டாள் உமா.

''அப்பா, எனக்கு வர்ற கணவர் வரதட்சணைன்னு ஒரு பைசாக் கூட கேட்கக் கூடாது. சீர்செனத்தின்னு இங்கேயிருந்து ஒரு எவர்சில்வர் ஸ்பூனைக் கூட எதிர்பார்க்கக் கூடாது. தன்னுடைய அப்பா, அம்மாவைக் காப்பாத்தறது எப்படி தன்னுடைய கடமைன்னு நினைக்கிறாரோ, அப்படி என்னுடைய அப்பா, அம்மாவை காப்பாத்தறது என்னுடைய கடமைன்றதை அவர் உணரணும். இந்த மூணு கண்டிஷனுக்கும் ஒத்துப் போற மாப்பிள்ளையாப் பாருங்க. எனக்கு ஆட்சேபணையில்லை. சொந்தத்திலே இப்படி யாரும் கிடைக்க மாட்டாங்கன்னு தோணினா, பேப்பர்லே விளம்பரம் கொடுங்க...'' என்று யோசனையும் வேறு சொல்லி விட்டாள்.

அவளுடைய தந்தை நடேசனுக்கு விழிப்பதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. இந்தக் காலத்தில் இப்படிப்பட்ட மாப்பிள்ளை எங்கே கிடைப்பான்?

ரிடையர்டு அரசு அலுவலரான அவரிடம், பி.எஃப்., கிராஜுவிடி பணம் கொஞ்சம் இருந்தது. அதைச் செலவு செய்து, ஒரே மகளான உமாவுக்குச் சுமாரான இடம் பார்க்க விரும்பினார் அவர். ஆனால் புதுமைப் பெண்ணான உமாவிற்கு இதில் சம்மதம் இல்லை. வரதட்சணை தருவது, சீர்செனத்திகள் செய்வது... இவற்றையெல்லாம், பெண் அடிமைத்தனத்தின் அடையாளங்களாக நினைத்தாள் அவள். மேலும், அப்பா தம்முடைய சேமிப்புப் பணத்தை எல்லாம் அவளுடைய திருமணத்திற்காகச் செலவு செய்து விட்டால் அவருக்கென்று ஒன்றுமே இருக்காதே என்ற ஆதங்கமும் சேர்ந்து கொள்ள, தன் கொள்கையில் பிடிவாதமாக இருந்தாள்.

உமாவின் விருப்பப்படியே விளம்பரம் கொடுத்து விட்டார் நடேசன்.

பிரம்மச்சாரியான ராமகிருஷ்ணனுக்கு அந்த விளம்பரம் பிடித்து விட்டது. சிறு வயதிலேயே தந்தையை இழந்து, குடும்பப் பாரத்தைச்



சுமந்து, மூன்று தங்கைகளுக்கு மிகுந்த சிரமத்துடன் திருமணம் செய்து கொடுத்திருந்த அவனுக்கு, கல்யாணத்தின் கஷ்டங்கள் எல்லாம் அத்துபடி. ஆகையால், தான் பட்ட துன்பங்கள் வேறு யாரும் படக் கூடாது என்ற நல்லெண்ணத்தில் வரதட்சணை வாங்காமல், திருமணம் செய்து கொள்வது என்ற முடிவுக்கு வந்திருந்தான் அவன். நடேசன் கொடுத்திருந்த விளம்பரத்திற்கு உடனே பதில் எழுதினான்.

பெண் பார்க்கும் பழக்கத்தில் நம்பிக்கை இல்லாத உமா, ராமகிருஷ்ணன் வரவிருந்த தினத்தன்று ஸ்பெஷலாக ஏற்பாடுகள் எதையும் செய்யவில்லை.

அப்பா, அம்மா, அக்கா, தங்கை, அத்தை, பாட்டி என்று பட்டாளங்கள் எதுவும் இல்லாமல், தன் ஒரேயொரு நண்பனுடன் மட்டுமே ராமகிருஷ்ணன் வந்தது நடேசனுக்கு மிகவும் பிடித்தது.

தேநீர்க் கோப்பையை அவர்கள் முன் வைத்த உமா, தானும் ஒரு கோப்பையுடன் அவர்கள் எதிரில் அமர்ந்து கொண்டாள். போலித்தனமில்லாத வெளிப்படையான அவளுடைய போக்கு, ராமகிருஷ்ணனுக்கு மிகவும் பிடித்துப் போய் விட்டது.

'சம்மதம்' என்று அவன் முகமே கூற, "உங்க டாட்டரை ஒரு வார்த்தை கேட்டுடுங்க ஸார்" என்றான் நடேசனிடம்.

மகளுடன் அவளுடைய அறைக்குள் நுழைந்து கொண்டே கேட்டார் நடேசன்.

"என்னம்மா, மாப்பிள்ளைப் பையன் ரொம்ப நல்லவனாத் தெரியறான். அவனுக்குப் பூரண சம்மதம்னு தெரியறது. அட்ரஸ் வாங்கிட்டு அவங்க அம்மாவுக்கு எழுதிடலாமா?" என்றவரை, "கொஞ்சம் இருங்கப்பா. என்ன அவசரம்?" என்றவள், "எனக்கு இன்னொரு இடம் பார்க்கலாம்னு தோணுது" என்றதும், அவருக்கு வியப்பு!

"ஏம்மா?" என்றார் நடேசன்.

"அவரு என்னைவிடக் கொஞ்சம் குள்ளமாகத் தெரியறாரு என்னோட நிறத்துக்கு அவரு கொஞ்சம் மட்டுதான். வெளியே போனா ஜோடிப் பொருத்தம் சரியா இருக்காது." என்றவள், "அதைவிட முக்கியம் அவரோட உத்தியோகம். அவரு வெறும் தாலுகா ஆபீஸ் கிளார்க். பாங்க் கிளார்க்கான என் சம்பளத்திலே பாதிகூட இருக்காது அவருக்கு. ஏன்பா, என்ன அவசரம்? இன்னும் ரெண்டு மூணு இடம் பார்க்கலாமே?" என்று சொன்னதும் நடேசன் மகளைக் கூர்ந்து பார்த்தார். குழப்பத்துடன் அவரைப் பார்த்தாள் உமா.

"உமா, உன் மனசுக்குப் பிடித்தவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை உனக்கு உண்டு. அதில் நான் தலையிட மாட்டேன். ஆனாலும் தந்தை என்ற முறையில் உனக்கு ஒரு விஷயத்தை உணர்த்த விரும்புகிறேன். வரதட்சணை, சீர்செனத்தி என்று காலங்காலமாகப் புரையோடிப் போய் விட்டிருக்கும் சமுதாயத்தை நீ உன் பங்குக்கு மாற்ற விரும்புகிறாய். ஒரு புரட்சி, சாதனை செய்ய விரும்புகிறாய். சந்தோஷம்தான். ஆனால் புரட்சி, சாதனை, அல்லது மாற்றங்களைக் கொண்டு வர விரும்புகிறவர்கள் அதைச் சும்மா செய்துவிட முடியாது. அதற்கு ஏதாவது ஒரு விலையைக் கொடுத்தேயாக வேண்டும். வரதட்சணை கொடுக்காமல், சீர்செனத்தி செய்யாமல் திருமணம் செய்து கொள்ள விரும்பும் நீ அப்படிச் செய்து கொள்ள முன்வருபவனை பேரழகனாகவும், பெரிய உத்தியோகத்தில் உள்ளவனாகவும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்த்தால் அவ்வளவு சுலபத்தில் நடக்கக்கூடியதா? அதற்காக வரதட்சணை கொடுக்க விரும்பாத பெண்கள் அனைவரும் கூன், குருடு, நொண்டி இவர்களைத்தான் மணம்புரிந்து கொண்டு திருப்தி அடைய வேண்டும் என்று நான் சொல்லவில்லை. ஆனால் ஓரளவுக்காவது 'காம்பரமைஸ்' செய்து கொள்ளலாம் அல்லவா! எல்லாமே நாம் நினைக்கிறபடி அமைந்து விடுமா? உன்னைப் போன்றவர்கள் முன்னோடியாக இருந்து விட்டுக் கொடுத்துச் செயல்பட்டால்தானே மற்றவர்களும் பின்தொடர்வார்கள்? அடுத்த இரண்டாவது தலைமுறைக்காவது வரதட்சணை, சீர்செனத்தி என்ற வார்த்தைகள் தெரியாமல் போயிருக்கும்? நீயே யோசித்துப் பார் மகளே..." என்று முடித்தார் நடேசன்.

தந்தையின் கூற்றிலிருந்த நியாயங்கள் உமாவுக்கு மெல்ல மெல்லப் புரிவது போலிருந்தது.



"லஞ்சப் பணத்தை டேபிளுக்கு மேலேயே கையில கொடுத்திடுங்க..."

"ஏன் சார்?"

"போன தடவை இப்படித்தான் என் கைன்னு நினைச்சுக்கிட்டு டேபிளுக்கு அடி வழியா பக்கத்து சீட் கிளார்க்கோட கையில கொடுத்திட்டுப் போயிட்டீங்க..."

— வி. கி. குமார்.

# யூ எல் ஐ பி
## குறைந்த முதலீட்டில் கூடுதல் பயன்கள்




**யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம் வழங்கும்**

- **வருமான வரி விலக்கு**
  வருமான வரிச்சட்டம் பிரிவு 80Cயின் கீழ் வருமான வரி விலக்கு.
- **உயர்ந்த வருவாய்**
  ஒவ்வொரு வருடமும் உயர்ந்து கொண்டிருக்கும் டிவிடெண்ட். இவ்வருட டிவிடெண்ட் 13.75% முன் எப்போதும் கண்டிராத அதிகபட்ச அளவு நீங்கள் 10 வருடக் காலத்தில் செலுத்தும் ரூ. 60,000,* ரூ. 1,13,155.97 ஆக உயருகிறது. 15 வருடக் காலத்தில் செலுத்தும் ரூ. 60,000,* ரூ. 1,57,299.74 ஆக உயருகிறது.
- **ஆயுள் காப்பீடு**
  மருத்துவச் சோதனை எதுமின்றி, ரூ. 60,000 வரை ஆயுள் காப்பீடு.
- **விபத்து காப்பீடு**
  ஆயுள் காப்பீடு தவிர, எல்லா அங்கத்தினருக்கும் ரூ. 15,000 வரை விபத்துக் காப்பீடு.
- **முதிர்வு போனஸ்**
  10 வருடத் திட்டத்தில் 5% மற்றும் 15 வருடத் திட்டத்தில் 7.5% முதிர்வு போனஸ் இலக்குத் தொகையில் வழங்கப்படுகிறது.

வயது தகுதி : 10 வருட திட்டத்திற்கு 18 முதல் 55 வரை.
15 வருடத் திட்டத்திற்கு 18 முதல் 50 வரை.

இலக்குத் தொகை : ரூ. 3,000 முதல் ரூ. 60,000 வரை.

இலக்குத் தொகை
ரூ. 60,000 ஆக
உயர்த்தப்பட்டுள்ளது.

* முதிர்வு போனஸ் உட்பட்டது. திட்டத்தில் சேரும்போது வயது 25 என எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.



**UNIT TRUST OF INDIA**

(A Public Sector Financial Institution) H.O. Bombay 400 020.

UTI.1303.89 TM C

**Regional Office:** 45, Second Line Beach, Madras 600 001. Ph: 587433, 580938.

**Our Chief Representatives in Tamil Nadu** ☐ COIMBATORE • **A Dhanabal,** Ph: 34776 ☐ KANYAKUMARI • **Subash Chandra Bose,** Nagercoil, Ph: 4449 ☐ MADURAI • **M Ramamoorthi,** Ph: 36661, 43179 ☐ NILGIRIS • **M Madhavan Nambiar,** Coonoor, Ph: 6253, 7037 ☐ NORTH ARCOT • **P Narayanan,** Vellore, Ph: 21575 ☐ PERIYAR • **K Jyothi Ramalingham,** Erode, Ph: 71785, 74785 ☐ SALEM/DHARMAPURI • **N K Inkarsal,** Salem, Ph: 66414, 51520 ☐ SOUTH ARCOT • **S Balakrishnan,** Cuddalore, Ph: 377, 46 ☐ THANJAVUR • **K Muthusamy,** Ph: 20374 ☐ TRICHY • **M Ramalingam,** Ph: 41282.

# மணல்வெளி மான்கள்

## 2

"ஐயய்ய... இது வேணாம் தம்பி."

"ஏன்?"

"உனக்கு நாஷ்டா வாங்கியாரச் சொல்லியிருக்கேன்."

"இருக்கட்டும். அதையும் ரெண்டு பேரும் சாப்பிடுவோம்."

"இது கேப்பக் கூழு. நீயெல்லாம் சாப்பிடக் கூடாது."

ஒரு மணி நேரத்துக்கு முன் சண்டை போட்ட ஆதியா இவன்? என்னமாய்க் கூசிக் குறுகுகிறான்? மனிதன் கூச்சப்படும் போதுதான் அவன் மேன்மை வெளிப்படுகிறது.

"நானும் கிராமத்தான்தான் ஆதி! நான் ஒண்ணும் மகாராஜா பிள்ளை இல்லே. சாதாரண ஹெட் கான்ஸ்டபிள் மகன்."

"அதுக்கில்லே."

"அம்மா போனப்புறம் அப்பாவுக்குப் பிடிக்குமேன்னு கூழ் கிண்டக் கத்துக்கிட்டேன்."

"பட்டம் வாங்கியிருக்கியே தம்பி! பம்பு செட்டு ரிப்பேர் பண்ண வச்சதே தப்பு. அப்புறம் வேற கூழைக் கொடுக்கணுமா?"

மேலும் அவனைப் பரிதவிக்க அனுமதியாமல் ஈய டிபன் தூக்கின் மூடியைத் திறந்தான். கும்மென்று மணம் தூக்கிற்று.

"சுடக் கூழா."

"ஏன் உனக்குப் புடிக்காதா தம்பி?"

"நானா சொன்னேன்? ஒரு தம்ளர்தானே இருக்கு?"

"இரு... பம்பு ஷெட்டிலே வேற ஒரு கிளாஸ் வச்சிருக்கேன்...

ஆதி எழுந்து போனான்.

யதேச்சையாகப் பார்வையைத் திருப்பிய போது சின்னதாகத் தேய்ந்து போன டிடர்ஜெண்ட் கட்டி தெரிந்தது. நித்யா விட்டுப் போனது.

ஆதி சண்டையிலிருந்து மீண்டு வரு முன்பே அவள் போய் விட்டாள்.

அவள் அவனுக்காகத் தண்ணீர் இறைத்ததையும், துணி துவைத்துக் கொண்டே அவர்கள் வம்பளந்ததையும் கூட்டம் பார்த்திருக்கிறது.

விட்டலாபுரத்தில் ஒருவன் பார்த்தாலே ஊரே பார்த்த மாதிரி. இது கூட்டம். கொஞ்சம் சிறகு வைத்துப் பறக்க விடுவார்கள். சிலருக்கு ஆதங்கம். பலருக்கு வயிற்றெரிச்சல்.

"வெளியூரானுக்குத்தாண்டா நம் ஊர்லே யோகம்!"

அன்றைக்கு பஸ் ஸ்டாப்பில் டீக்கடை வைத்திருக்கிற நாயருக்கும், தனக்கும் என்று பொதுவாக ஒருவன் வீசிவிட்டுப் போன சொல் நினைவு வந்தது.

அவன் திரும்பி தாம்போகிப் பாலத்தையும் ஆற்று மணல்வெளியையும் கரையோரம் இமைத்து நிற்கும் தென்னை மர வரிசையையும், ஊருக்கு மகுடமிட்ட மாதிரி நிற்கும் அனந்த சயனப் பெருமாள் கோயிலையும் பார்த்தான்.

நெஞ்சில் ஏதோ கேவிற்று. ஆறாம் வகுப்பிலிருந்து ப்ளஸ் டூ வரை ஏழு வருஷம். ஆற்றில் ஏழு வெள்ளங்கள். தாம்போகிக் கண்மாய்க்குள் எதிர் நீச்சல்கள்.

பிறந்து வளர்ந்து இந்த ஊரின் அழகும் அருமையும் அறியாது மாண்டு போன ஆயிரக்கணக்கானோருக்கு அனுமதிக்கப்பட்ட சொந்தம் எனக்கில்லையா?

அம்மா கையைப் பிடித்துக் கொண்டு போய் ஹைஸ்கூலில் சேர்த்தாள். 'பையன் எப்படிப் படிக்கிறான் சார்?' என்று மாதம் தவறாமல் வகுப்பு விடாமல் வந்து, ஆசிரியர்களுக்குத் தாய்மைக் கரிசனத்தைக் கூச்சமின்றி வெளிப்படுத்தினாள். கடைசியில் அதோ அந்த ஈச்சமரப் புதர் அருகே சாம்பலானாள். அப்புறம் அவன் பதக்கம் பதக்கமாக வாங்கியதைப் பத்திரிகைகள் படம் போட்டு வெளியிட்டன, விட்டலாபுரம் மேல்நிலைப் பள்ளியின் பெயரையும் சேர்த்து.

இதற்கு மேல் ஒரு சொந்தமா? யார் வழங்குவது அதை? கிராம நிர்வாக அதிகாரியா? ஜனன மரண ரிஜிஸ்தரா?

நித்யா விட்டலாபுரத்தில் பிறந்தவள். அந்த ஊர் மண், காலில் ஒட்டிக் கொண்டு கூட அடுத்த ஊருக்குப் போய்விடக்கூடாதாம்.

கையில் தம்ளரோடு ஆதி இரும்புவதைக் கண்டதும் மனசுக்குள் யாரோடு நாம் சண்டை போடுகிறோம் என்று விழிப்பு வந்தது.

யாரிடமுமில்லை. சொந்த ஊர் என்பதால் மட்டும் சொந்தம் வந்து விடாது. இல்லாததால் அது போய் விடாது.

ஆதி தம்ளரைக் கழுவிக் கொண்டு வந்திருந்தான்.

மிதமான உயரம். சிரிக்கும் போது ஒரு பேதைமை. உழைக்கும் போது ஒரு மூர்ச்சனை. ஆதிக்கு இது சொந்த ஊர். காலின் சக்கரம்

வையவன்

சென்னை, பம்பாய், தில்லி என்று திரிந்து சுற்றிவிட்டு இப்போது துபாய்க்குத் துடிக்கிறது.

கூழை வாங்கி ஒரு மிடறு குடித்தான். ஆலிலையில் எலுமிச்சையளவு புளியும் வெங்காயமும் வைத்து அரைத்த துவையல்.

''இதைத் தொட்டுக்கோ தம்பி...''

கூழில் மிதமான உப்பு. லேசாக மோர் விட்டிருந்தாள் மங்கலட்சுமி. துவையல் நாவில் ஊறிய நீரில் ஐக்கியமாகி, சுகம் மண்டை வரை பாய்ந்தது.

''அற்புதம் ஆதி!''

''சும்மானாச்சும் சொல்லாத தம்பி!''

எளிமை, தான் எளிமையானதே என்று உணர்ந்திருப்பதால் அது எத்தனை சத்தியம்!

''இந்த ஊரை விட்டுட்டு, இந்த ஆத்தோர நெலத்தை விட்டுட்டு, இந்தக் கூழை விட்டுட்டு ஏன் எங்கேயோ பறந்து போயிடணும்னு துடிக்கிறே ஆதி?''

அவன் வாயைத் துடைத்துக் கொண்டான். ஏதோ தவறு நேர்ந்து, அதற்கு நீதி உபதேசம் கேட்கிற பாவனையில் ஆதியின் முகம் பவ்யமாயிற்று.

### சென்ற வாரக் கதை

வெளியூர்க்காரனான கௌதம், பி. எஸ்ஸி படித்தவன். வேலை கிடைக்கவில்லை என்று சோம்பியிராமல் கிணற்றில் பம்பு ஷெட் ரிப்பேர் செய்பவன். ஆதிகேசவன் என்ற தன் கிராமத்து நண்பன் குத்தகைக்குப் பயிரிடும் நிலத்தில் உள்ள மோட்டார் பம்பில் ரிப்பேர் செய்து கொண்டிருக்கிறான். விட்டலாபுரத்தைச் சேர்ந்த நித்யா அங்கே துணி வெளுக்க வருகிறாள். அவனும் நித்யாவும் காதலிக்கின்றனர். அவனுக்குத் தண்ணீர் இறைத்துத் தரும் போது தூரத்தில் ஆதிகேசவன் புணா மரத்தடியில் உள்ள மற்றொரு பம்பு ஷெட் நிலத்தில் குத்தகைப் பயிர் செய்யும் மாசிலா அவனை அடிப்பது கண்ணில் படுகிறது. இது இத்துடன் முடியப் போவதில்லையென்று நித்யா கூறுகிறாள்.

''இதுக்கு மேல நிம்மதியும், திருப்தியும் வெளியே கிடைக்கும்னா நினைக்கிறே?''

ஆதி அவனையே ஒரு முறை கண் சிமிட்டாமல் பார்த்தான். பிறகு தலைகுனிந்து இன்னொரு தம்ளர் கூழ் வார்த்தான்.

''அப்படியில்லே தம்பி...'' சொல்லிக் கொண்டே தம்ளரை நீட்டினான்.

கௌதம் வாங்கிக் கொண்டான்.

''நீ பட்டம் வாங்கினே. வேலை கிடைக்கலேன்னு ரோதனை கொட்டிக்காம போக்குணு தெரிஞ்ச வேலைகளைச் செஞ்சுக்கிட்டு வர்றே. தெம்பா இருக்கே. மனசைச் சஞ்சலப்பட விடாமே கட்டுலே நிக்கிறே?''

''பூச்சுத்தறியா?''

''அட நீ ஒண்ணு! உள்ளதுதானப்பா.''

''இப்ப நான் சொல்லட்டா?''





"மாப்பிள்ளை என்ன பண்றார்?"

"போலீசில் இருக்கார்!"

"என்னவா?"

"கைதியாத்தான்!"

— கீழை. அ. கதிர்வேல்.

"சொல்லு."

"கட்டும் இல்லே. கத்தரிக்காயும் இல்லை. வேலைக்கு எழுதிப் போடறேன். வர்றதில்லே. வந்துதான் எதுவும் ரொம்ப ணும்னு விதியில்லே. அப்பா பென்ஷன் வந்துட்டிருக்கு. போன வருஷம் ஊர்ல புஞ்சை மோட்டிலே ரெண்டு புட்டிக் கடலைக்காய் வந்துது. கைச்செலவுக்கு அவருக்குப் போதும். படிக்க மட்டும் தானா செஞ்சேன்? எங்கே போறது? பழங் கடப்பாணையிலே போட்டு மூடியா வக்கச் சொல்றே?"

அவன் துவையலை வழித்த விரலைப் பார்த்துக் கொண்டே கேட்டான்:

"வெள்ளிக்கிளமை சினிமாக் கொட்டாயிலே பாதில மிஷின் ரிப்பேர்னு அவுட் பாஸ் குடுத்தானே! அதை நீதான் ரிப்பேர் பண்ணினியா?"

திடீரென்று விஷயத்தை விட்டு அதிசயோக்திகளுக்குத் தாவி விட்டான். புரிந்தது.

"ஆபரேட்டர் சொன்னாரா?"

"அடடா அவரு ஒன்னைப் புகழ்ந்ததை நீ கேட்டிருக்கணுமே!"

"நீயும் ஒரு கிளாஸ் ஊத்திக்க."

ஆதியை மேலே பேச விடாமல் கரை மாற்றினான். ஆதி சொல்லுக்குக் கட்டுப் பட்டான்.

ஒரு வாய் அவன் விழுங்கட்டும் என்று காத்திருந்து கௌதம் கேட்டான்.

"நீ இன்னும் என் கேள்விக்குப் பதில் சொல்லலே ஆதி."

"நான் மறக்கலியே."

"சொல்லு."

ஆதி ஆற்றைப் பார்த்தான். என்னமோ திடீரென்று முகம் திரும்பிய மாதிரி. அவனது கீழ்க் கன்னச்சதை நடுங்குவது தெரிந்தது. அழுகிறானோ?

கௌதமுக்கு அழுகையே பிடிக்காது. அதுவும் ஆண் அழுகை. எதற்காகவும் என்ன நேரிட்டாலும் அழுது அழுது புலம்புவதும் அழுகையை ரசிப்பதும், ரசிக்கிறார்கள் என்பதற்காக அழுவதும்!

எட்டாவது முடித்த கையோடு பூந்துறை ஸ்டேஷனில் கௌதமின் அம்மா சாவித்திரியின் பிரேதத்தை இறக்கிய போது, ஒவென்று அவன் கதறிய கதறல் பூந்துறை ஸ்டேஷனைக் கலக்கிற்று.

அம்மாவின் பிரேதத்தோடு உடன் இறங்கிய அவன் தந்தை சபாநாயகம், அவனைக் கட்டிப் பிடித்துக் கதறுவார் என்று எல்லோரும் எதிர்பார்த்தனர், அவன் கூட.

ஆனால் அவர் கண்களில் மாலை மாலையாகக் கண்ணீர் வந்தது.

"ச்சீ, இதென்ன வெட்கக்கேடு!" என்று அவர் வெட்கப்பட்டவர் போலக் கண்ணீர் முகத்தில் வழியுமுன், தோளில் போட்ட துண்டால் துடைத்துக் கொண்டார்.

பிறகு அவனை ஆழமாக, இமைவெளியின்றி வெகுநேரம் பார்த்துவிட்டு அவன் வலக்கையைத் தம் கையால் இறுகப் பற்றிக் கொண்டார். அதற்கப்புறம் அவர் அவனுக்கு அழ வாய்ப்பளித்ததே இல்லை.

என்ன ஆதி?

அவன் முகம் திரும்பினான். விழிகள் பளபளத்தன. அழுகை கரைகட்டி நின்றது. அதைச் சந்திக்க விரும்பாமல் இமை தாழ்த்தினான் கௌதம்.

"அம்மாவுக்கு, எனக்குக் கல்யாணம் பண்ணிடம்னு ஆசை தம்பீ... என் கைல நாலு காசு இல்லன்னா ஊமை மாமியாரை எந்த மருமவ மதிப்பா சொல்லு?"

ஆதி என்னமாய்த் தாக்கி விட்டான்!

"அட பொம்பளை வேணும்னா எங்கியோ போய்ப் பொரண்டு எவளையோ இஸ்தாந்து வச்சுக்கலாம். இந்த வாயில்லா ஜன்மத்து மனசு கலங்காம அதுக்குச் சோறு போட்டு, துணி தொவிச்சு, வாரிப் போடறதுக்கு முன்னே கால் மாட்டிலே ஒக்கார ஒருத்தியாப் பார்க்கறேன். எல்லாம் பணம். எதுக்கும் பணம். போவுது காலம்! நானும் தேடறேன்."

ஆதி வீசிய கோடரியைப்பிய்த்தெடுத்து மீண்டும் போட்டான்.

ஆக இதுவும் அம்மாக்கள் விவகாரம்.

அம்மா, அம்மா. இப்படி சின்னச் சின்னப் பல்சக்கரங்களாக ஒன்றையொன்று தள்ளி, சிறியது பெரியதைத் தள்ளி, எதற்கோ இயங்கும் யந்திரங்களின் உந்து விசை அவள்தானா? இருக்கலாம். யார் அறிவார்?

பேச்சை மாற்றியாக வேண்டியிருக்கிறது. இதோ பாம்பு உரித்துப் போட்ட தோல் கிடக்கிறதே இது மாதிரி புது வளர்ச்சிக்கு, புதிய கணத்திற்கு மூச்சுத் திணறிவிடாமல் இருக்க ஆள் மாற்றமடைவது போல் பேச்சும் மாற வேண்டும்.

"தொணாமரத்து மாசிலா கிட்டே என்னத்துக்குத் தகராறு?"

"நானா பண்றேன்?"

"பின்னே?"

"நல்ல கதையா இருக்கே! அவ கொளுந்தியா மச்சினன் துபாய்ல வேலை வாங்கித் தர்றான்னு ஆயிர ரூபாயை வாங்கிக்குடுத்தேன். அஞ்சு வட்டி அசலுக்கு நெஞ்சு முட்ட வட்டி ஆயிடுச்சி. வேல வாணாம்.

ரூபா குடுண்ணு மூணுமாசமாக் கேக்கறேன். தோ தோண்ணு வாய்தா வக்கிறான். போன செவ்வாச் சந்தையிலே ஆறாந் தேதின்னான். இன்னிக்குத் தேதி எட்டு.''

''என்ன சொல்றான்?''

''கேக்கப்போனா அவன் கொளுந்தியாள வுட்டுட்டு ஓடிட்டான்னாம். இவன் தானே ஜாமீனு. பொறுப்பா பதில் சொல்லணுமில்லே.''

கௌதம் காது கொடுத்தான்.

''நீ என்ன பண்றியோ பண்ணிக்கன்னான். கொல வுழும்ணு கத்தினேன். கொடலை உருவிடுவேன்னான். உருவுடா பாக்கலாம்... நீ ஆம்பளையானாக் கொடலை உருவுடான்னேன்.''

''கை வச்சுட்டான். இல்லியா?''

ஆதி பதில் சொல்லவில்லை.

''அவனாலயும் கொடுக்க முடியாது. அவன் நெலையே ஆட்டம் கண்டு போச்சு. தெரியும்லே.''

''தெரியும் தெரியும்.''

''ஆறு மாசத்துக்குள்ளே ஒருத்தன் ரெண்டு அடி வாங்கினான்னா... அதுவும் என்ன மாதிரி அது?''

கௌதம் நினைவில் தோய்வது போன்று பேச்சை நிறுத்தினான்.

கூழ் தீர்ந்து விட்டது.

ஆதி இரண்டு தம்ளர்களையும் பாத்திரத்தையும் கழுவ எழுந்தான்.

கௌதம், தாம்போகிப் பாலத்தின் மீது விட்டு வேலை முடிந்து துணி வெளுக்க இடுப்பில் ஆளுக்கு ஓர் அன்னக்கூடையோடு கைவீசி நடந்துவரும் பெண்களைப் பார்த்தான்.

பாத்திரங்களை அலம்பிக் கொண்டே ஆதி பேசினான்.

''நான் கொடுத்த பணத்தைக் கேக்கத் தானே போனேன், தம்பி?''

''நீ போன வேளை சரியில்லே.''

''நான் என்ன செய்யட்டும். என் கடன்காரன் பொழுது விடியறப்பவே என் வீட்டுக் கதவைத் தட்டிவிட்டானே.''

லேசான காற்று வந்தது. அலையலையாகப் பயிர் வரிசைகளை, மயில் கழுத்து நெளிவது போல அசையச் செய்து, அந்த அலை நுணாமரத்துப் பம்பு ஷெட் வரை ஒரு சிறு தூரப் பயணம் போயிற்று.

காற்றோட்டத்தோடு கண்ணோட்டம் செலுத்திய கௌதம் பார்வையை மாசிலாவின் குத்தகை நிலத்தில் நிறுத்தினான்.

பதின்மூன்று ஏக்கர் நிலம் அது!

முதலில் மாசிலா பத்து வயசுப் பையனாக மண் மிதித்த பூமி. அவனுடைய அப்பன் மாரிமுத்துதான் கைபிடித்து அவனை அழைத்து வந்தானாம்.

விட்டலாபுரமே சொல்லும்.

கோரையும் காட்டுச் செடிகளுமாகப் புதர் மண்டியிருந்த நிலம். ஆற்றை ஒட்டிய சிறு மேடு. குறுக்கு வழியென்று மாட்டு வண்டிப் பாதைக்காகச் சக்கரங்கள் ஓடி ஓடித் திமிசு வாங்கிய பூமி.

மாரிமுத்துவை கௌதம் பார்த்ததில்லை. விட்டலாபுரம் சொல்லியிருக்கிறது.

கருங்காலி மரத்துச் சட்டம் மாதிரி, வலுவான கட்டடம் உள்ள உடம்பாம். ஆள் வைத்து வேலை வாங்கினான் என்றால் வெள்ளி முளைத்ததும் தெரியாது; மறைவதும் தெரியாதாம். அப்படி ஓர் ஈடுபாடு! அவன் சமப்படுத்திய நிலம் அது!

இன்றுதானே டிராக்டர்! அன்று மாரிமுத்து கலப்பையைப் பிடித்தால் ஏர்முனை அரையடி இறங்குமாம். மாசிலா ஏர் முனை முக்கால் அடி இறங்குவதைக் கௌதம் பார்த்திருக்கிறான்.

எவ்வளவு வியர்வை. எல்லாம் ரத்தம். வியர்வையான ரத்தம். அவன் அப்பன் மாரிமுத்து மஞ்சள் காமாலையில் உயிர் விட்டான். கொல்லிமலைச் சாரலிலிருந்து உதிரம் ஊற்றி விட்டலாபுரத்து விளைச்சல் காண வந்த சொந்தம் அது.

நுணா மரத்துப் பம்பு ஷெட் அவர்கள் முன்னின்று வெட்டியதுதான். முகம் தெரியாத முதலாளி பணம்தான் அனுப்ப முடியும்.

பணமா கிணற்றை வெட்டும்?

மனிதர்கள் தேவைப்பட்டனர். மாரிமுத்துவையும் மாசிலாவையும் போல் மண்ணை நேசித்த மனிதர்கள்.

மண் கூட மாதா மாதிரிதான். அம்மாவேதான்.

முட்டி முட்டிக் குடிக்கிற கன்றுக்குத் தாய்ப் பசு நிறையத்தான் சுரக்கிறது. சொந்தமா சொந்தமில்லையா என்ற கணக்கு வழக்குப் பார்க்காமல் மாதாவின் மார்பில் முட்டி முட்டி வெட்டிய கிணறு அது.

வருஷத்தில் பத்து நாட்கள் மட்டுமே வெள்ளம் ஓடும் பாலாற்றில், மீதி நாட்களில் விட்டலாபுரம் பெண்களுக்கு நுணா மரத்துப் பம்பு ஷெட்தான் படித்துறை வம்பளப்பு கவுண்ட்டர்.

''கரண்ட் வந்துடுச்சு தம்பி.''

''போ... போ, போயி மோட்டார் ஸ்விட்சைப் போடு.''

ஆதி ஸ்விட்சைப் போட்டு விட்டான்.

உறுமிக் கொண்டே எழுந்து உதறிவிட்டு ஹூங்காரமாக ஒலிக்கத் தொடங்கியது மோட்டார்.

(தொடரும்)

---

''என் கதையைப் படிச்சிட்டு நிறைய வாசகர்கள் கடிதம் போட்டிருக்கறதாச் சொல்றீங்களே, அப்படி என்ன எழுதியிருக்காங்க?''

''சந்தா பணத்தைத் திருப்பி அனுப்பச் சொல்லித்தான்!''

— நீடாமங்கலம் ஜே. பி.



கூரேலென்ற முரட்டு ஆள் ஒருவன் அந்த வீட்டின் உச்சியில் நின்று கொண்டு கடப்பாரையால் ஓங்கிக் குத்தினான். அழுத்தி, மூச்சுப் பிடித்து எம்பினான். சுவர் பொதுபொதுவென்று சரிந்தது. தெருவே கூடி நின்று வேடிக்கை பார்த்தது.

வேணு கண்ணை இறுக மூடிக் கொண்டான். அதைப் பார்க்கக் குரூரமாய் இருந்தது. கண்ணெதிரே நடக்கின்ற கொலை: முழு மனிதனைத் தோல், சதை, குடல் என்று அக்கக்காய்ப் பிய்த்து எறிகிற மாதிரியான ஹிம்சை! வீடு என்பது வெறும் சுண்ணாம்பு, செங்கல், மணல், மரம் இரும்புச் சமாச்சாரங்கள் மாத்திரமல்ல; ஓர் உயிர்.

வேணுவுக்கு அந்த இடத்தில் நிற்க முடியவில்லை. தன் பழைய வீட்டை இடிப்பது பார்க்க மனசு வலித்தது. மெல்ல, மார்க்கெட் வீதிக்குள் நுழைந்து நடந்தான். வீட்டின் நினைப்பு வந்ததும் பாட்டியின் முகம் வந்து மனசில் மோதிற்று!

'ஏலே ராசா மவனே! உங்க அம்மா கிட்டே ஒரு தம்ளர் காப்பி வாங்கியாந்து கொடுப்பா.'

'அம்மா, பாட்டிக்குக் காப்பி கொடு.'

'இதா பாரு வேணு, நீ ஸ்கூலுக்குக் கிளம்



# முதுமை

பற வழியப் பாரு. பாட்டிக்கு நான் காப்பி கொடுத்துட்டேன்.'

'எப்படியம்மா கொடுத்தே?'

ஒரு மூலையில் குறுகிப் போய்க் கிடந்த பாட்டி விரைப்பானாள். சதைகள் தளர்ந்து, கூன் போட்டு விட்டது. எழுபத்தி இரண்டு வருஷம் வாழ்ந்து பெற்ற முதிர்ச்சி, முகமெல்லாம் படிந்து கிடந்தது. பழுத்த பூசணி மாதிரி மிக மிருதுவாகிப் போனாள். பார்வை சுத்தமாய் மழுங்கிற்று. குரல் மட்டும் கோவில் மணி மாதிரி 'ணங்' என்று ஒலிக்கும். அம்மா சமையல் கட்டிலிருந்து மாங்கு மாங்கு என்று ஓடி வந்தாள். கையை மடித்து இடுப்பில் வைத்துக் கொண்டாள்.

'இதோ பாருங்க, வயசான மனுஷி பொய் பேசப்படாது. இப்பத்தானே காப்பி கொடுத்திட்டுப் போனேன். யாரு எக்கேடு கெட்டு ஒழிஞ்சாலும் கார்த்தாலே ஆவி பறக்க ஒரு தம்ளர் வார்த்திடுறேன். கொடுக்கவே இல்லைன்னு சாதிக்கிறீங்களே...'

'நான் குடிக்கவே இல்லை.'

'அடக் கடவுளே! எத்தனை பொய் பாருங்க!'

வேணுவுக்குச் சங்கடமாயிற்று! புத்தகங்களை வரிசையாய் அடுக்கிக் கொண்டிருந்தவன், அம்மாவைத் தலையை உயர்த்திப் பார்த்தான். இது புதிதில்லை; வாடிக்கைதான்! அம்மா கொடுமைக்காரியில்லை. ஏதோ ஓர் அகங்காரம் உசுப்பி விடுகின்றது. பாட்டி அம்மாவுக்குப் பண்ணிப் பண்ணிச் செய்திருக்காளாம். கிழக்குத் தெருவே புருவம் வளைத்து ஆச்சரியம் காட்டுமளவு இழைவாய் இருந்திருக்கின்றார்கள். இது உடல் தளர்வு கண்டவுடன் எழுகின்ற ஆங்காரம்!

'அம்மா ப்ளீஸ், போகட்டும், ஒரு தம்ளர் காப்பி இருந்தா பாட்டிக்குக் கொடும்மா.'

'இன்னும் ஒரு தம்ளர் காப்பி வேணும்னு கேட்டா அது வேற. குடிச்சுட்டுக் கொடுக்கவே இல்லைன்னா? அப்ப நான் கொடுமைக்காரின்னுல்ல ஆயிடும். விடியறதுக்குள்ளே பத்துத் தம்ளர் காப்பி வேணும்.. எல்லாம் என் தலை எழுத்து.'

'நீ குடுப்படியம்மா பத்துத் தம்ளர் காப்பி. கார்த்தாலே உசுருக்குப் பரிதவிச்சு வர்றதுன்னுதான் கேட்டேன். அதுக்கு இல்லைன்னுட்டுப் போ! ஏன் தபோ தபோன்னு அடிச்சுக்கிறே?'

சட்டென்று அம்மா காலை உரசித் தேய்த்துக் கொண்டு வீட்டிற்குள் நடக்க, வேணுவுக்குக் குபுக்கென்று சிரிப்பு வந்து விட்டது. இனி பாட்டி லேசில் விடாது என்று தெரியும். கண்ணில் படுகின்றவர்களையெல்லாம் சமிக்ஞை காட்டிக் கூப்பிட்டுப் புலம்பும். திடுமென ஒரு நாள் மிகவும் இழைவாய் அம்மாவுடன் பேசும். பிசிறான குரலில் குடும்பத்திற்கு நிறையப் புத்தி கூறும். அம்மாவும் பவ்வியம் காட்டிக் கேட்பது போலப் பேர் பண்ணிக் கொள்வாள். பாட்டிக்கு ஸ்பெஷலாய் ஏதாவது பண்ணிக் கொடுப்பாள். பாட்டிக்குத்தான் இந்தக் காலத்துச் சமாச்சாரங்கள் எதுவுமே புரியவில்லை. 'அங்கே உட்காரப்படாது. ஒற்றைக் காலில் நிற்கப்படாது' என்று ஆயிரம் கட்டளை போடும். இந்தத் திசை பார்த்துத்தான் சாப்பிடத் தட்டுப் போட வேண்டும் என்று சாஸ்திரம் பேசும். அதுவும் பொம்பளைங்க விஷயத்தில் சொல்லவே வேண்டாம். அறுபது வருஷத்துக் கட்டுப்பாட்டை அப்படியே எதிர் பார்க்கும். முடியுமா? அது மீறுவது பார்க்கப் பாட்டியின் கண்கள் குத்தும். அந்த வலி தாங்காது தான் தாறுமாறாகப் புலம்பும்.

அதுதான் வீட்டில் எல்லோருக்கும் தொல்லை. பாட்டி லேசுப்பட்டதில்லை. தாத்தா செத்துப் போகவும் பிள்ளைகளைத் தானே படிக்க வைத்து ஆளாக்கியவள். குருவி போலச் சேர்த்துச் சுயமாய் வீடு கட்டியவள். இன்று வீட்டிற்குப் பின் புறம் தளதளவென்று வளர்ந்து நிற்கின்ற வாழை மரத்துக்கும் தெருவை அடைத்து அடர்த்தியாய் நிழல் தருகின்ற புளிய மரத்திற்கும் பாட்டி தான் விதை!

இப்போது பாட்டி வீட்டிற்குப் பாரம். சுமக்க முடியாத பாரம். தலை வலித்தால் பூலாங் கிழங்கும் நொச்சி இலையும் தேட வேண்டும். ஜுரம் கண்டால் சுக்குக் கஷாயம் தயாரிக்க வேண்டும். இங்கிலீஷ் வைத்தியம் சேராது. பாட்டி முன் மாதிரி இல்லை. பேச்சு ஜாஸ்தியாகி விட்டது.

வீட்டில் ரேழி தாண்டினதும் இடது பக்கம் சின்னதாய் ஓர் அறை. பாட்டி அங்கு தான் இருப்பாள். வீட்டிற்கு வருகின்றவர்களையெல்லாம் எதையாவது பேசி ஹிம்சிக்கின்றதே என்று செய்த ஏற்பாடு தனி அறை. முன்பு அந்த அறையில் பழைய சாமான் பெட்டிகள் அடைத்து வைக்கப் பட்டிருந்தன. இப்போது அதை எல்லாம்

பாரதிபாலன்

ஒழித்துவிட்டுத் தலையணை, பாய் எடுத்துப் போட்டுப் பாட்டிக்கு விட்டாயிற்று. நாலு வருஷமாய்ப் புறாக் கூண்டுக்குள் சிறகு முறிந்து கிடக்கின்றது. யாராவது வீட்டிற்கு வந்தால் திரும்பிப் போகும் போதுதான் மெல்லத் தலையை நீட்டி 'வர்றேன்' பாட்டி என்ற ஒற்றைச் சொல்லோடு ஓடிவிடப் பார்ப்பார்கள்.

திடுமென ஒரு நாள் பாட்டிக்கு முடியாது போயிற்று. கண்களில் குழி விழுந்து, பஞ்சு மூடிற்று! கழுத்துத் துவண்டு கால் அகட்டிக் கிடந்தது. அப்பா லேசாய்ப் பதறினார். சீரங்கம் சித்தப்பாவுக்கு ஆள் அனுப்பப்பட்டது. அம்மாவும் படபடப்பானாள். கண்களில் நீர் தேங்கிப் பாட்டியைப் பரிதாபமாகப் பார்த்தாள். பாட்டிக்கு லேசாய் அசைவு இருந்தது. எல்லோரும் பாட்டியிடம் ஆசிர்வாதம் வாங்கினார்கள்.



அவர்: என்னுடைய இரட்டைக் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும்படி அந்த அரசியல்வாதியிடம் கேட்டது தப்பாப் போச்சு!

இவர்: ஏன், என்ன ஆச்சு?

அவர்: லஞ்ச ராஜ், ஊழல் ராஜ் என்று பேர் வைத்துத் தொலைச்சுட்டார்!

— கே. ஜி. எஃப். பழனிச்சாமி.

காசிச் செம்பில் பாட்டிக்குப் பால் ஊற்றினார்கள். பஞ்சாங்கம் வைத்து அப்பா நாள் நட்சத்திரம் பார்த்தார். நல்ல நாளாம்.

'டேய் வேணு, பாட்டி செத்திடுமாடா?' தம்பி வீசு கேட்டான்.

'ஆமாம்.'

'பாட்டி செத்துட்டா அந்த ரூம் எனக்கு வேணும். என்னோட புக்ஸ் எல்லாம் வைச்சுப்பேன். பிரண்ட்ஸுங்களோட அங்கேதான் விளையாடுவேன்.'

'ம்ஹூம்! எனக்குத்தான் அந்த ரூம். நான் தாண்டா பாட்டிக்கு வெத்தலை இடிச்சுக் கொடுப்பேன். எனக்கு நெறைய புக்ஸ் இருக்கு. வைக்க இடமே இல்லை. அம்மா கிட்டே உனக்கு முன்னாடியே நான் சொல் விட்டேன்.'

இருவரும் அம்மாவிடம் ஓடினார்கள். அம்மா விரட்டி அனுப்பி விட்டாள். பாட்டியின் உடல்நிலை மாறிக் கொண்டே வந்தது. மோசம்தான். இரவு வரை கூடத் தாங்காது என்றார்கள்.

'டேய் வேணு, ப்ளீஸ்! பாட்டி ரூமை எனக்குக் கொடுத்திடுடா...'

வேணு தம்பிக்கு முடிவு சொல்லவில்லை. அந்த அறை தனக்கு வேண்டும் போல இருந்தது. சின்ன அறைதான். ஆறாவது படிக்கின்றவனுக்கு அது அற்புதம்! குண்டு பால் பல்பு பளிச்சென்று எரியும். ஜன்னல் திறந்தவுடன் ஜிலுஜிலுவென்று காற்று நுழையும். அங்கிருந்து பார்த்தால் கடைவீதி மொத்தமும் தெரியும். முரளி மாடியில் பட்டம் விடுவதைப் பார்க்க முடியும். வழுவழுப்பான தரை. தாமரைப் பூப் போட்டு ஊதாக் கலர் கோழிக் குண்டு பதித்திருக்கின்றார்கள். இதை தம்பிக்கு விடக் கூடாது. வேணுவின் மண்டைக்குள் வண்டு ஊறிற்று!

எதிர்பார்த்தபடியே அதிகாலையில் பாட்டி போயிற்று. உயிர் உறிஞ்சப்பட்டு சக்கையாய்ப் படுக்கையில் கிடந்தது. வீடு பரபரப்பாயிற்று. வேணுவுக்கும் வாசுவுக்கும் அடி மனத்தில் இருக்கும் ஆசை வட்டமிட்டுக் கொண்டே இருந்தது. எப்படியாவது பாட்டி அறையைக் கைப்பற்றி விட வேண்டும். பாட்டியை அடக்கம் பண்ணி விட்டு வீடு திரும்புகின்ற வரை ஓர் ஓரத்தில் இந்த எண்ணமும் ஒட்டியே இருந்தது. குளித்து டிரெஸ் மாற்றி அந்த அறைக்கு வந்து பார்த்த போது, ஒரு மரக்காலில் நெல்லும் தீபமும் இருந்தது. நிறைய அந்நிய முகங்கள் அடர்த்தியாய் அமர்ந்திருந்தன. பாட்டி இருந்த இடம் துடைத்துப் போட்டது போல இருந்தது.

'ஏலே ராசா மவனே! இப்படிவாய்யா...'

பாட்டி சமிக்ஞை செய்து கூப்பிடுவது போலப் பட, வேணுவுக்கு அழுகை மாதிரி வந்து விட்டது. பாவம், பாட்டி செத்துப் போய் விட்டது. மெல்ல அறையை விட்டு வெளியேறினான். அம்மாவிடம் போனான்.

'எல்லாம் எப்பம்மா ஊருக்குப் போவாங்க...?'

'பதினெட்டு நாள் ஆவும்.'

விரல் விட ஆரம்பித்தார்கள். வாசு வேணுவை சமாதானம் பண்ணிப் பார்த்தான். 'ப்ளீஸ் எனக்குப் பாட்டி ரூம் கொடுடா. நீ வேணும்னா என் பீரோவை வெச்சுக்கயேன்.' வேணு மசியவில்லை. 'நான்தாண்டா பெரியவன். ரூம் எனக்கு வேணும். நீயும் வேணும்னா அங்கே வந்து உன் புக்ஸ் எல்லாம் வெச்சுக்கயேன்' என்று எதிர் அம்பு விட்டான். சின்னப் பசங்களுக்குப் போய்த் தனி அறை ஒழித்துக் கொடுப்பார்களா? கேள்வி எழுந்தது. எப்போதோ பேச்சுவாக்கில் அப்பா அம்மாவிடம் சொன்னதுதான். 'பசங்க உக்காந்து படிக்க அமைதியான எடமே இல்லை. அவங்க பாட்டி இருக்கின்ற ரூமைப்

பிற்பாடு எவனுக்காவது ஒழிச்சுக் கொடுத்திடணும்...' என்று எப்போதோ சொன்னது.

**கா**ரியம் முடிந்து பதினெட்டாவது நாள் அப்பாவுக்கும் சீரங்கம் சித்தப்பாவுக்கும் மனஸ்தாபமாயிற்று. சொத்துப் பிரச்னைதான். அடிநடியென்று அசிங்கமாகி விடக் கூடாதே என்று உறவுகள் ஜமுக்காளம் விரித்து உட்கார்ந்து பஞ்சாயத்துப் பேசிற்று! சொத்துக்களை இரண்டாய்க் கூறு போட, வீடு சீரங்கம் சித்தப்பாவுக்குப் போயிற்று. மறு மாசமே வீட்டை ஒழித்துக் கொடுக்க வேண்டும் என்று பேச்சு. நடுத் தெருவில் அப்பா வாடகை வீடு பிடித்தார். மொத்தமே இரண்டு அறைகள்தான். புது வீடு பார்த்ததும் வேணுவுக்கு அழுகை வந்து விட்டது. பழைய வீட்டின் ஏக்கம் கூடிற்று!

**வீ**டு வந்ததும் சட்டென்று வேணுவுக்கு நினைவு கலைந்தது. வரும் வழியில் தன் பழைய வீட்டை இடித்தது ஏனோ இன்னும் வலித்தது. பாட்டியிருந்த வீடு. வீம்பாய் வேண்டுமென்று வாங்கிய சீரங்கம் சித்தப்பா யாருக்கோ மட்ட விலைக்கு விற்றிருக்கிறார். பல ஆண்டுகளுக்குப் பிறகு இப்போது இடித்து ஷாப்பிங் காம்ப்ளெக்ஸ் கட்டப்போகின்றார்களாம். எந்த அறைக்கு அலைபாய்ந்தோமோ அந்த அறை இப்போது எப்படி இருக்கும்..? யோசித்தான். புரியவில்லை.

''ப்பா.''

ஐந்து வயது மகன் ஓடி வந்து வேணுவின் காலைக் கட்டிக் கொண்டான். வீட்டிற்குள் விரல் காட்டிக் குதூகலப்பட்டான். யாரோ வந்திருக்கின்றார்கள்.

''உங்க தம்பி வாசு வந்தார். உங்க அம்மாவுக்கு முடியலையாம். கொண்டாந்து விட்டுட்டுப் போறார். அங்க வெச்சுப் பார்க்க முடியாதாம்.''

பதறினான். ஹால் தாண்டி உள் அறைக்குச் சென்றான். முகத்தில் சோகை படர்ந்து தசை தளர்ந்து, அம்மா படுத்துக் கிடந்தாள். மெல்ல அமர்ந்து, ''அம்மா'' என்றான். அம்மா மெல்லக் கண் விழித்துப் பார்த்தாள். வேணுவைப் பார்த்ததும் தரையில் கை ஊன்றி எழுந்தாள்.

''முடியலையாம்மா?''

குபுக்கென்று அம்மா அழுது விட்டாள். பேசாது கண்களில் நீர்த் திரட்டிக் காட்டினாள். நெஞ்சோடு அம்மாவைக் கட்டிக் கொண்டான்.

'அம்மா இனி இந்த அறை உனக்குச் சிறையாகி விடக் கூடாது. சிறகு முறிந்தவுடன் புறாக் கூண்டு தேடி வந்தாயா? அந்த ஹிம்சை பாட்டியோடு ஒழியட்டும். கடவுளே என் அம்மா சௌகர்யமாய் இருக்க வேண்டும். முதுமை இயற்கை. அது புரிந்து என் மனைவியும் பிள்ளைகளும் என் அம்மாவிடம் நடக்க வேண்டும்.'

வேணு மனசுக்குள்ளே கைகூப்பினான்.

## அருள்வாக்கு



**அ**ப்பா வைத்துவிட்டுப் போகும் ஸொத்து சாச்வதமில்லை. நாமே தேடிக் கொள்கிற ஸொத்துக்களுக்கும் இதே கதி தான்.

சாச்வதமான ஸொத்து, இழந்து போகாத, ரிப்பேர் பண்ண வேண்டாத ஸொத்து, 'டாக்ஸ்'ும் திருட்டும் தொடாத ஸொத்து, 'திருட்டுப் போயிடுமோ?' என்று பயப்படவும் வேண்டாத ஸொத்து, ஏமாற்று வழிகளில் போய் நாம் காப்பாற்றிக்கொள்ள வேண்டாத ஸொத்து. அப்பா கொடுக்க முடியாது; நாமாகவும் தேடிக் கொள்ள முடியாது.

குரு என்கிற ஒருத்தர்தான் சாச்வதமான அந்த ஸொத்தைத் தருகிறவர். இது நாம் போன பிற்பாடு நம் கூட வராத ஸொத்தில்லை — நம்மையே திரும்பி வரப் பண்ணாத ஸொத்து! எது சாச்வதமோ அந்தப் பரமாத்மாவுடன் நம்மைப் பிரிக்க முடியாமல் சேர்த்து விடுகிற ஸொத்து.

ஞானம் என்ற ஸொத்தை குரு அநுக்ரஹிக்கிறார். ஸொத்து க்ஷீணித்துக் கொண்டே போவது, நாம் சிரமப்பட்டு அதை விருத்தி பண்ணப் பாடுபடுவது, இந்தப் பாட்டில், பாவ மூட்டையை இன்னும் பெரிசாக்கிக் கட்டிக் கொள்வது என்பதற்கெல்லாம் இடமே வைக்காமல், நாளுக்கு நாள் தானும் வளர்ந்து, நம்மையும் வளர்ப்பது குரு தருகிற உபதேச ஸொத்து.

மற்ற ஸொத்து எதுவானாலும் அதனால் கிடைக்கும் எல்லா ஸுகங்களும் தாற்காலிகம்தான். 'நித்யானந்தம்' என்றே சொல்லப் படுவதான சாச்வத ஸுகத்தைத் தருவது குரு அநுக்ரஹிக்கிற ஞானமொன்றுதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



# சிடு சிடு மாப்பிள்ளை

அரை மணி நேரத்துக்கும் மேல் ஆகி விட்டது; அந்த இறுக்கமான சூழ்நிலை மாறவே இல்லை. பெண்தான் பிடிக்க வில்லையோ, அல்லது சுபாவமே அப்படித் தானோ தெரியவில்லை. — வசந்தாவைப் பெண் பார்க்க வந்த பிள்ளை ரொம்ப சீரிய ஸாக இருந்தான்.

இத்தனைக்கும் பிள்ளை வேலை பார்த்து வந்த கம்பெனி; ஓய்வு நேரத்தில், அவன் நடத்தி வரும் நாடகக் குழு; பம்பாயில் உள்ள தூரத்து உறவினர்கள் — எல்லா வற்றையும் பற்றிப் பேசக் துவக்கியாகி விட்டது. ஓரளவு பிரபலமாக அவன் நடித்த 'ரோல்' — ஹாஸ்ய பாகம் குறித்துக் கூட சிரித்துப் பேச முயற்சி பண்ணினார்கள்.

ஊஹூம். பிரயோஜனமில்லை. பிள்ளை எதற்கும் வாய் திறக்கக் காணோம். சீரிய ஸாகக் கடுகடுவென்று காட்சி அளித்தான்.

"என்னடா? ரொம்ப வெட்கப்படறே? பெண்ணோட ஏதாவது பேசிப் பாரேன்!"

"சரியாப் பார்த்துக்கோ பெண்ணை. அப்புறம் அந்த ரவி மாதிரி தொந்தரவு படுத்தக் கூடாது," என்றாள் அம்மாக்காரி. "இவனோட அத்தை பிள்ளை ரவி, கல் யாணத்துக்கு முதல் நாள் பெண்ணைப் பார்த்து, ரொம்ப உயரமாத் தெரிகிறா ளேன்னு தவிக்கப் போனான்!"

"ஆமாம் எனக்கு ஞாபகம் வரது. திரு நெல்வேலியிலே நடந்த கல்யாணம். பெண் உயரம் உயரம்னு சொல்லி மாய்ஞ்சு போயிட் டான். இவன் இன்னும் குள்ளம் ஆனது போலாகிவிட்டான். மூஞ்சியே இல்லை," என்று வேறு ஒருத்தர், கூடச் சேர்ந்து கொண்டு சிரித்தார்.

பலன் ஏதும் இல்லை. பிள்ளை முகத்தில் எந்த விதச் சலனமும் காணோம். லேசான புன்னகை கூட எழவில்லை.

காப்பி, டிபன் உபசரிப்புக்கள் மற்ற சம் பிரதாயப் பேச்சுக்கள் எல்லாம் அமைதி யாக நடந்தன. உர்ரென்று இருக்கும் பிள்ளை, மௌனமாகக் கலந்து கொண் டான்.

"வரோம். ஊருக்குப் போய்ச் சேர்ந்து லெட்டர் போடறோம்," என்று சொல்லி விட்டுப் பிள்ளைவீட்டுக்காரர்கள் கிளம் பினார்கள்.

அவர்கள் புறப்படுவதற்கு என்றே காத்திருந்த மாதிரி, வசந்தா பொலு பொலு வென்று பிடித்துக் கொண்டாள். "எல்லாம் இந்த மணி அண்ணாவால்தான். ரொம்பத் தெரிஞ்ச மாதிரி ஓயாமல் பேசினான்..... அவருக்குப்பிடிக்கவில்லையோஎன்னமோ!" — அவளுக்கு அழுகையே வந்து விடும் போலிருந்தது.

"எல்லா வகையிலும் இந்தப் பிள்ளை பொருத்தம்; பணம், படிப்பு, அந்தஸ்து சகலமும் பொருந்தி வந்தது. ஆனால் அவர் ரொம்ப சீரியஸாக இருந்தாரே!" வீட்டி லுள்ளோர் மாய்ந்து போனார்கள்.

"என்னவோ, இந்தக் கல்யாணம் நடக்கக் குருவாயூரப்பன்தான் கிருபை பண்ண ணும்," என்றாள் அம்மா.

குருவாயூரப்பன் கிருபை பூரணமாக இருந்தது. போன மூன்றாம் தினமே சாதக மான பதில் வந்து விட்டது. மட மடவென்று ஏற்பாடுகள் துவங்கி, ஒரு சுபயோக சுப நாளில் வசந்தா மிஸஸ் ராஜாராமன் ஆனாள்.

தனிமையில் கணவனைச் சந்தித்தவுடன் வசந்தா கேட்ட முதல் கேள்வி, "எங்களை ரொம்பப் பயமுறுத்தி விட்டீர்களே!"

"நானா!" என்று கூச்சத்துடன் ஆச் சரியப்பட்டான் ராஜாராமன்.

"பின்னே? பெண் பார்க்க வந்த அன்று பயங்கர சீரியஸாக இருந்தீர்களே கடு கடு வென! நாங்கள் ரொம்பவும் பயந்து போனோம்."

"ஓ... அதுவா!" திடீரென்று ஞாபகம் வந்து ராஜாராமன் சிரித்தான்; சிரிப்பு அடங்கவே இல்லை.

"என்னவாம்? சொல்லிட்டுச் சிரியுங் களேன்!"

"ஹூ ஸீ... ஏற்கெனவே எனக்குக் கோணா மாணாப் பல் வரிசை. போதாக் குறைக்கு அன்னிக்கு வெற்றிலைக் காவி வேறே.... நீயோ பி.டி.எஸ் படிச்ச பல் டாக்டர். வாயைத் திறந்து அதனால் முதல் இம்ப்ரெஷன் மோசமானால்!"

அப்பாடா என்றிருந்தது வசந்தாவுக்கு. புன்னகை செய்தாள். "நான் பிறத்தி யாருக்கு பல் டாக்டர், உங்களுக்குக் கூடவா?" என்று செல்லமாகச் சிணுங்கி னாள்.

— ஈஸ்வர் குமார்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 51

## மணிமேகலை கேட்ட வரம்

சித்தப்பிரமை கொண்டவளைப்போல் அப்படியும் இப்படியும் பார்த்துத் திருதிருவென்று விழித்துக் கொண்டு மணிமேகலை உள்ளே வந்தாள். வானதி கூறியதைப்போல் அவளுடைய தோற்றம் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. அழுது அழுது அவளுடைய முகமும் கண்ணிமைகளும் வீங்கிப் போயிருந்தன.

ஆயினும் எக்காரணத்தினாலோ குந்தவைக்கு அவள் மீது இரக்கம் உண்டாகவில்லை. சமீப காலத்தில் சோழ குலத்துக்கு ஏற்பட்ட விபத்துக்களுக்கெல்லாம் கடம்பூர் சம்புவரையர் மாளிகையிலே நடந்த சதியாலோசனைதான் ஆதி காரணம் என்பதை அவளால் மறக்க முடியவில்லை. கடைசியாக, வீராதி வீரனான தன் தமையன் கரிகாலன் அவளுடைய வீட்டிலேதான் கொலையுண்டு மாண்டான் என்னும் எண்ணமும் அவளுக்கு ஆத்திரமூட்டிக் கொண்டிருந்தது.

சட்டென்று, இன்னொரு விஷயம் ஞாபகம் வந்தது: இவளுடைய தமையன் கந்தமாறனும் வாணர் குலத்து வீரரும் பழைய சிநேகிதர்கள். அந்த சிநேகித்தை முன்னிட்டுத்தான் வந்தியத்தேவர் கடம்பூர் மாளிகைக்குச் சென்றிருந்தார். அங்கே நடந்த சதியாலோசனையைப் பற்றி அறிந்து வந்து சொன்னார். கந்தமாறன் தன் சகோதரியை வல்லத்து இளவரசருக்கு மணம் செய்து கொடுக்கும் உத்தேசமும் ஒரு காலத்தில் கொண்டிருந்தான். அந்தப் பெண் இவளாகத்தான் இருக்க வேண்டும்!....

இந்தச் செய்தி நினைவு வந்ததும், குந்தவைக்கு மணிமேகலையின் மீது ஒரு புதிய சிரத்தை உண்டாயிற்று. ஆகா! இவள் எதற்காகத் தன்னைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறாள்? தந்தைக்காகவும் தமையனுக்காகவும் முறையிடுவதற்கு வந்திருக்கிறாளா? சம்புவரையர் மாளிகைக்குத் தன் தமையன் கரிகாலனை அழைத்த போது, அவனுக்கு இப்பெண்ணை மணம் செய்து கொடுக்கும் பிரஸ்தாபமும் செய்யப்பட்டது. கரிகாலனிடம் ஒரு வேளை இந்தப் பேதைப் பெண் தன் உள்ளத்தைச் செலுத்தியிருப்பாளா? தான் மணக்க நினைத்தவன் அகால மரணமடைந்ததால் இவள் சித்தம் கலங்கி விட்டதா? அதைப் பற்றி ஏதேனும் சொல்ல வந்திருக்கிறாளா? அல்லது..... அல்லது...., ஒரு வேளை அப்படியும் இருக்கக் கூடுமா? கந்தமாறன் தன் சிநேகிதனைப் பற்றி இவளிடம் சொல்லித்தானிருக்க வேண்டும். வந்தியத் தேவர் இவள் வீட்டில் தங்கியிருந்திருக்கிறார். முன்னால் ஒரு தடவை இருந்திருக்கிறார். இப்போது அதிக நாள் தங்கி

அமரர் கல்கி

இருந்திருக்கிறார். இவள் மனம் ஒரு வேளை வந்தியத் தேவரிடம் ஈடுபட்டிருக்குமோ? அப்படியானால், அவர் இவளை நிராகரித்திருப்பார் என்பதில் ஐயமில்லை. அதற்கு வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் பொருட்டு இல்லாத பொல்லாத பழிகளையெல்லாம் அவர் மீது சுமத்த வந்திருக்கிறாளா?....

இவ்வளவு எண்ணங்களும் அதி விரைவாகக் குந்தவையின் உள்ளத் திரையில் தோன்றி மறைந்தன.

மணிமேகலையின் நெஞ்சத்தை ஊடுருவி அதில் உள்ளதைத் தெரிந்து கொள்ள விரும்புகிறவள் போல் குந்தவை உற்றுப் பார்த்தாள். அந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் மணிமேகலை தலை குனிந்தாள். அவளுடைய கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த் துளிகள் தரையில் சிதறி விழுந்தன.

"பெண்ணே! நீ ஏன் கண்ணீர் விடுகிறாய்? உன் தமையன் இன்னும் உயிரோடுதானே இருக்கிறான்? என் தமையன் அல்லவா உங்கள் மாளிகையில் படுகொலை செய்யப்பட்டு இறந்தான்? அழுதால், நான் அல்லவோ அழ வேண்டும்? ஆனால், என்னைப் பார்! நான் அழவில்லை; கண்ணீர் விடவும் இல்லை. மறக்குலத்து மாதர்கள் வீர மரணம் அடைந்தவர்களைக் குறித்து அழுவது வழக்கமில்லை!" என்றாள் குந்தவை.




ணிமேகலை இளைய பிராட்டியை நிமிர்ந்து நோக்கி, "தேவி! என் அண்ணன் வாள் முனையில் இறந்திருந்தால் நானும் அழமாட்டேன். ஆனால், இறந்தவர்... இறந்தவர்..." என்று மேலே சொல்லத் தயங்கி விம்மினாள்.

குந்தவை தான் முதலில் சந்தேகித்துதான் உண்மையாயிருக்க வேண்டும் என்று எண்ணத் தொடங்கினாள். இவள் ஆதித்த கரிகாலரிடம் தன் நெஞ்சைப் பறி கொடுத்திருக்கக் கூடும். அதைச் சொல்லத் தயங்குகிறாள் போலும்! ஐயோ, பாவம்! அப்படியானால் இவளுக்கு ஆறுதல் சொல்ல வேண்டியது தான். "பெண்ணே! நெஞ்சைத் திடப்படுத்திக் கொள். மனத்தில் உள்ளதைத் தைரியமாகச் சொல்லு! இறந்து போனவன் உன் தமையன் அல்ல; என் அண்ணன்தான். அதற்காக நீ ஏன் அழ வேண்டும்? ஒரு வேளை உங்கள் வீட்டில் விருந்தாளியாக வந்திருந்த போது இப்படியாகிவிட்டதே என்று நினைத்து வருந்துகிறாயாக்கும்! அதற்கு நீ என்ன செய்வாய்? வீட்டில் பெரியவர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். பொறுப்பு அவர்களுடையதே...."

"இல்லை, தேவி, இல்லை! பொறுப்பு என்னுடையதுதான்! அதனாலேயே எவ்வளவு அடக்கிப் பார்த்தும் என் துயரத்தை அடக்க முடியவில்லை. என் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதும் நிற்கவில்லை. இந்தக் கையில் பிடித்த கத்தியினால் அந்த வீராதி வீரரைக் கொன்றேன் என்று எண்ணும் போது என் நெஞ்சம் வெடித்துச் சிதள் சிதளாகி விடும்போல் இருக்கிறது...."

குந்தவை தேவி திடுக்கிட்டவளாய், "பெண்ணே! இது என்ன பிதற்றுகிறாய்? உனக்குச் சித்தப் பிரமை பிடித்து விட்டதா?" என்றாள்.

"இல்லை; இல்லை! எனக்குச் சித்தப் பிரமை இல்லை. பிடித்தால் இனிமேல் தான் பிடிக்க வேண்டும். உண்மையில் நடந்ததையே சொல்கிறேன். ஆதித்த கரிகாலரைக் கொன்றவள் இந்தப் பாதகிதான். தங்களிடம் உண்மையைச் சொல்லித் தக்க தண்டனை பெறுவதற்காகவே வந்தேன்....."

"சீச்சீ! இது என்ன அவதூறு? வீராதி வீரனாகிய என் தமையன் ஒரு பெண்ணின் கையால் கொலையுண்டதாக என்னை நம்பச் சொல்கிறாயா? இம்மாதிரி சொல்லும்படி உனக்கு யார் கற்பித்துக் கொடுத்தார்கள்?...."

"ஒருவரும் கற்பித்துக் கொடுக்க வில்லை, தேவி! நான் சொல்லுவதை யாரும் நம்பக் கூட மறுக்கிறார்கள். என் தமையனும் தந்தையும் கூட நான் சொல்வதை ஒப்புக் கொள்ளவில்லை....."

"ஏன் வீண் கதை சொல்லுகிறாய்? அவர்கள்தான் உனக்கு இவ்விதம் சொல்லும்படி கற்பித்திருக்க வேண்டும். அல்லது நீயே உன்னுடைய தந்தையையும் தமையனையும் காப்பாற்றுவதற்காக இப்படிக் கற்பனை செய்து கொண்டு வந்தாய் போலும்!...."

"தேவி! அவர்களை ஏன் நான் காப்பாற்ற முயல வேண்டும்! என் விருப்பத்துக்கு விரோதமாக அவர்கள் என்னை மணம் செய்து கொடுக்கப் பார்த்தார்கள். முதலில், மதுராந்தகத் தேவரைக் கட்டிக் கொள் என்றார்கள். பிறகு திடீரென்று ஆதித்தகரிகாலரை அழைத்துவந்து 'இவரைத்தான் நீ மணந்து கொள்ள வேண்டும். மணந்து கொண்டால் சோழ சிங்காதனம் ஏறுவாய்!' என்றார்கள். அப்படி என்னைப் பலி கொடுக்கப் பார்த்தவர்களுக்காக நான் பரிந்து ஏன் வரவேண்டும்? அவர்கள் செய்த குற்றத்தை நான் செய்ததாக ஏன் ஒப்புக் கொள்ள வேண்டும்? இல்லவே இல்லை!" என்று கூறினாள் மணிமேகலை.

"பெண்ணே! நீ சொல்லுவது ஒன்றைவிட ஒன்று விசித்திரமாயிருக்கிறது. என்

தமையன் கரிகாலனை மணந்து கொள்ளும் பாக்கியத்துக்காக எத்தனையோ ராஜாதி ராஜர்களின் குமாரிகள் தவங் கிடந்தார்கள். அப்படியிருக்க, உன் தந்தையும் தமையனும் உன்னைப் பலி கொடுக்க விரும்பியதாக நீ சொல்லுவது ஏன்? சோழர் குலத்தில் வாழ்க்கைப் படுதல் அவ்வளவு பயங்கர மான துன்பம் என்று நீ கருதியது ஏன்?''

''தேவி! எனக்குக் கூடப் பிறந்த தமக் கையோ, தங்கையோ, யாரும் இல்லை. தங்களையே என்னுடைய உடன் பிறந்த சகோதரியாக நினைத்துச் சொல்கிறேன்...'' என்றாள் மணிமேகலை.

''என் தமையனைக் கொன்றதாகச் சொல்லுகிறாய்; என்னுடன் சகோதரி உறவு கொண்டாட எப்படித் துணிகிறாய்?'' என்று இளையபிராட்டி சற்றுக் கடுமையாகக் கேட்டாள்.

''எனக்கு அந்த உரிமை உண்டு. தங்கள் சகோதரர் கரிகாலர் என்னைக் கூடப் பிறந்த சகோதரியாக எண்ணினார். அவ் வாறு தம் கைப்பட எழுதியும் இருக்கிறார். அதை நினைக்கும்போது தான் அவரை நான் கொல்லும்படி நேர்ந்தது குறித்து என் உள்ளம் துடிக்கிறது. அதற்குப் பிராயச் சித்தம் என்னவென்று கேட்பதற்காகவே தங்களிடம் வந்தேன்!'' என்று கூறிவிட்டு மீண்டும் விம்மினாள் மணிமேகலை.

இளையபிராட்டி வானதியிடம் மெது வான குரலில், ''பாவம்! இந்தப் பெண் ணுக்கு உண்மையிலேயே சித்தப்பிரமை தான்போலிருக்கிறது. இந்தச் சமயத்தில் இவளை அழைத்துக் கொண்டு வந்தாயே? திடீரென்று வெறி முற்றிவிட்டால் என்ன செய்கிறது?'' என்றாள்.

வானதி ''அக்கா! எனக்கும் கவலை யாகத்தானிருக்கிறது. தயவு செய்து கோப மாகப் பேசாதீர்கள். நல்ல வார்த்தையாகப் பேசி அவளைத் திருப்பி அனுப்பி விடு வோம்!'' என்றாள்.

குந்தவை மணிமேகலையைப் பார்த்து, ''பெண்ணே! நடந்தது நடந்து விட்டது. எல்லாம் விதியின் செயல்! வருத்தப்படாதே! என்னை உன் தமக்கையாகவே நீ பாவித்துக் கொள்ளலாம். ஏதோ சொல்ல வேண்டும் என்றாயே? அது என்ன? அல்லது நீ விரும் பினால் இன்னொரு சமயம் வேண்டு மானாலும் சொல்லிக் கொள்ளலாம்!'' என்றாள்.

''இல்லை, இல்லை; இப்போதே சொல்லி விடுகிறேன். அக்கா! தாங்கள் பெண்ணாய்ப் பிறந்தவர்கள். ஆகையால், நான் சொல் வதைத் தெரிந்து கொள்வீர்கள். புருஷர் களிடம் எவ்வளவு சொன்னாலும் அவர் களால் தெரிந்து கொள்ள முடியாது. ஒரு பெண் தன் உள்ளத்தை ஒருவருக்குக் கொடுத்து விட்டாள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்படிப் பட்டவர் கையில் ஆயுதம் ஒன்றுமின்றி நிராதரவாக இருக்கும் போது, இன்னொருவன் கையில் பெரிய வாளை எடுத்துக் கொண்டு அவரைக் கொல்லப் போகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்போது அந்தப் பெண் உண்மையான அன்புள்ளவள் என்றால், என்ன செய்வாள்? பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாளா?....''



ந்தவைக்கு உடனே மந்தாகினி யின் நினைவு வந்தது. அவ ளுடைய கண்களில் கண்ணீர் துளித்தது.

''அது எப்படிச் சும்மா பார்த்துக் கொண்டிருப் பாள்? குறுக்கே சென்று தன் உயிரைக் கொடுத்தாவது தன் காதலனுடைய உயிரைக் காப்பாற்ற முயன்றிருப்பாள்!''

இதைக் கேட்ட மணிமேகலை, ''ஆகா! இந்தமாதிரி யோசனை சொல்ல எனக்கு யாரும் இல்லாமற் போய் விட்டார்களே? அந்தப் பாதகி பழுவூர் நந்தினியின் யோச னையைக் கேட்டல்லவா மோசம் போய் விட்டேன்? என்னைத் தன் உடன் பிறந்த சகோதரியாகப் பாவித்து என் காதலருக்கு மணம் செய்து வைக்கவும் எண்ணியிருந்த உத்தமரை இந்தப் பாவியின் கைகளால் கொன்று விட்டேனே?'' என்று சொல்லி விம்மினாள்.

இளையபிராட்டி குந்தவை தேவி திரும்பி வானதியைப் பார்த்து, ''வெறி முற்றிக் கொண்டு வருகிறது!'' என்று மெல்லிய குரலில் கூறினாள்.

பின்னர், மணிமேகலையை நோக்கி, ''பெண்ணே! அழ வேண்டாம்! நடந்தது என்னவென்று சொல்லு! இல்லாவிட்டால், இன்னொரு சமயம் சொல்லுகிறாயா?'' என்றாள்.

''இல்லை, இல்லை, இப்போதே சொல்லி விடுகிறேன், அக்கா! என் தமையன் கந்த மாறன் வெகு காலமாகத் தன் சிநேகிதர் ஒருவரைப் பற்றி எனக்குச் சொல்லி வந் தான். அவர் சில மாதங்களுக்கு முன்னால் ஒரு நாள் கடம்பூரில் உள்ள எங்கள் மாளி கைக்கு வந்தார். அவரைப் பார்த்தவுடனேயே என் நெஞ்சம் 'இவர்தான் என் நாயகர்' என்று தீர்மானித்து விட்டது.....''

''இளையபிராட்டி குரலில் சிறிது நடுக் கத்துடனேயே ''அப்படி உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட பாக்கியசாலி யார்?'' என்று கேட்டாள்.

அவரைப் பாக்கியசாலி என்றா சொல்

கிறீர்கள்? இல்லை, இல்லை. என் உள்ளம் அவரிடம் சென்றபோது, என் துரதிர்ஷ்டமும் அவரைப் பிடித்துக் கொண்டது. இன்று இந்தத் தஞ்சாவூர்க் கோட்டையின் பாதாளச் சிறையில் அவர் அடைபட்டுக் கிடக்கிறார். அக்கா! பழுவேட்டரையர் வீட்டுப் பெண்கள் சொன்னார்கள். இந்தக் கோட்டையிலுள்ள பாதாளச் சிறை ரொம்பப் பயங்கரமாக இருக்குமாமே? அதற்குள் அடைபட்டவர்கள் திரும்ப உயிரோடு வருவதில்லையாமே?'' என்றாள்.

''அதெல்லாம் பொய், பெண்ணே! நானும் இதோ நிற்கும் வானதியும் பாதாளச் சிறைக்குச் சில காலத்துக்கு முன்பு கூடப் போயிருக்கிறோம்.....''

''தேவி! நான் பாதாளச் சிறைக்குப் போக முடியுமா? ஒரு தடவை அவரைப் பார்க்க முடியுமா?''

''அவர் யார் என்று நீ இன்னும் சொல்லவில்லை, பெண்ணே!''

''அவர் வாணர் குலத்து இளவரசர்; பெயர் வந்தியத் தேவர்!''


ந்தவையும் வானதியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

வானதி இப்போது குறுக்கிட்டு, ''அவரைப் பற்றி உனக்கு ஏன் இவ்வளவு கவலை? அவருக்கும் உனக்கும் என்ன உறவு?'' என்று கேட்டாள்.

மணிமேகலை வானதியைப் பார்த்து, ''நீ யார் அதைக் கேட்பதற்கு?'' என்று ஆத்திரமாய்க் கூறினாள்.

உடனே தணிவடைந்து, ''கோபித்துக் கொள்ளாதே, அம்மா! நீ கொடும்பாளூர் இளவரசி வானதி அல்லவா? உன்னுடைய பெரிய தகப்பனார்தானே இன்று இக் கோட்டையின் அதிபதியாக இருக்கிறார்? உன் காலில் விழுந்து கேட்டுக் கொள்கிறேன். எனக்கு ஒரு வரம் கொடு! உன் பெரிய தகப்பனார் பெரிய வேளாரிடம் சொல்லி வந்தியத் தேவரைப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை செய்! அவருக்குப் பதிலாக என்னைப் பாதாளச் சிறையில் போடச் சொல்லு! இளவரசர் கரிகாலரைக் கொன்ற பாதகி நான்! என் குற்றத்தை நானே ஒப்புக் கொள்ளும்போது, இன்னொருவர் பேரில் குற்றம் சுமத்துவது என்ன நியாயம்?.... தேவி! தங்களையும் அடிபணிந்து கேட்டுக் கொள்கிறேன். கொடும்பாளூர் பெரிய வேளார் நியாயம் செய்யா விட்டால், தங்கள் தந்தை சக்கரவர்த்தியிடம் நேரில் முறையிட்டுக் கொள்ள விரும்புகிறேன். அதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்!'' என்றாள் மணிமேகலை.


ந்தவையின் உள்ளம் பல உணர்ச்சிகளால் அலை கடல் போலக் கொந்தளித்தது. வந்தியத்தேவரைப் பாதாளச் சிறையில் போய்ப் பார்ப்பதற்குக் கூட அவள் தயங்கிக் கொண்டிருந்தாள். இந்தப் பெண்ணோ வந்தியத் தேவரிடம் கொண்ட காதல் நிமித்தமாகக் கொலைக் குற்றத்தையே ஒப்புக் கொள்ள முன் வந்திருக்கிறாள்.

ஆனால் இவள் கூறுவதில் எவ்வளவு உண்மை? எவ்வளவு கற்பனை? காதலனைக் காப்பாற்றுவதற்காக இப்படிக் கற்பனை செய்து கூறுகிறாளா? ஒரு வேளை நந்தினியின் துர்ப்போதனையைப் பற்றிக் கூறினாளே, அதனால் மதிமயங்கி இவளே அக்கொடிய செயலைச் செய்திருக்கவும் கூடுமா?

இல்லை, இல்லை; இவளால் அந்தப் பாதகத்தைச் செய்திருக்க முடியாது. வந்தியத் தேவரைக் கொலைக் குற்றத்திலிருந்து தப்புவிப்பதற்கே இவ்விதம் சொல்லுகிறாள். இவள் பேசும் விதத்திலிருந்தே இது நன்கு தெரிகிறது. இவள் பேச்சை யாரும் நம்ப மாட்டார்கள். இவள் பேச்சை நம்பி வந்தியத் தேவரை விடுதலை செய்யவும் மாட்டார்கள்.

ஆனாலும், இவளிடமிருந்து இன்னும் ஏதேனும் தெரிந்து கொள்ள முடியுமா என்று பார்க்க வேண்டும். கரிகாலனுடைய அகால மரணத்தில் ஏதோ மர்மம் இருக்கிறது என்பது நிச்சயம். அதை இந்தப் பெண்ணின் மூலமாக வெளிப்படுத்த முடியுமா?

''மணிமேகலை! உன் நெஞ்சின் உறுதியைப் பாராட்டுகிறேன். உன் காதலனைக் காப்பாற்றும் பொருட்டு நீ உன்னுடைய குற்றத்தை ஒப்புக் கொள்ள முன் வந்ததைப் பாராட்டுகிறேன். இம்மாதிரி அரிய செயல்களைக் கதைகளிலும் காவியங்களிலும் தான் கேள்விப்பட்டிருக்கிறோம். உன்னைப் பற்றிக் கவி பாடுவதற்குச் சங்கப் புலவர் யாரும் இந்த நாளில் இல்லாமற் போய் விட்டார்கள். ஆனால் உன் வார்த்தையை நான் நம்பினாலும், மற்றவர்கள் நம்ப வேண்டுமே? கரிகாலனுடைய உயிரற்ற உடம்புக்குப் பக்கத்தில் வந்தியத்தேவர் இருந்ததாக உன் தந்தையும் தமையனும் சொல்லுகிறார்களே? அவர்கள் பேச்சை நம்புவார்களா? உன் வார்த்தையை நம்புவார்களா? உன் வார்த்தையை நம்புவதற்கு இன்னொரு தடையும் இருக்கிறது. வல்லத்து இளவரசரை நான்தான் அவசரமாக என் தமைய

னிடம் அனுப்பினேன். கடம்பூருக்குப் போகாமல் தடுத்து விடும்படி சொல்லி அனுப்பினேன். அப்படிப் போனாலும், கரிகாலனை விட்டு ஒரு கணமும் பிரியாமலிருந்து அவனுக்குப் பாதுகாப்பாயிருக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பினேன். அன்றியும் கரிகாலனின் மெய்க் காவற்படையைச் சேர்ந்தவர் வல்லத்து இளவரசர். கரிகாலன் மரணமடையும் போது இவர் அருகில் இருந்திருக்கிறார். அப்படியிருந்தும் அவனைக் காப்பாற்றவில்லை. ஆகையினால் கடமையில் தவறிவிட்டவராகிறார். தம் உயிரைக் கொடுத்தாவது கரிகாலனுடைய உயிரை இவர் காப்பாற்றியிருக்க வேண்டும். இவரே கொல்லவில்லை என்று ஏற்பட்டாலும், கடமையில் தவறியதற்குத் தக்க தண்டனை உண்டல்லவா?''

"தேவி! அவர் தமது கடமையில் சிறிதும் தவறவில்லை.''

''அதற்கு உன் வார்த்தையைத் தவிர வேறு என்ன அத்தாட்சி இருக்கிறது?''

''இதோ அத்தாட்சி இருக்கிறது! தங்கள் தமையனாரின் எழுத்து மூலமான அத்தாட்சியே இருக்கிறது!'' என்று கூறிக்கொண்டே மணிமேகலை தன் இடையில் செருகியிருந்த ஓலை ஒன்றை எடுத்துக் கொடுத்தாள்.




ந்தவை அளவில்லா ஆர்வத்துடன் அந்த ஓலையைப் படித்தாள். ஆம்; ஆதித்த கரிகாலனின் சொந்தக் கையெழுத்துத்தான் அது. வேறு யாருக்கும் தெரியக் கூடாது என்பதற்காக அவனே எழுதியிருக்கிறான். குந்தவைக்குத்தான் முகவரியிட்டு எழுதியுள்ளான் —

''என் அருமைச் சகோதரியார், சக்கரவர்த்தித் திருமகளார், இளைய பிராட்டியார் குந்தவை தேவிக்கு, ஆதித்த கரிகாலன் எழுதியது.

''எத்தனையோ காலமாக எனக்கு இரவில் தூக்கம் கிடையாது. மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு கொடிய பாவம் செய்தேன். சரணாகதி அடைந்த பகைவனைக் கொன்றேன். அவனும் அவனுக்காக உயிர்ப் பிச்சை கேட்டவளும் என்னை வருத்திக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் என்னை நிம்மதியாகத் தூங்க விடுவதில்லை.

''இன்று அதிகாலையில் தூக்கமில்லாமல் வெளிவந்த போது வால் நட்சத்திரம்

விழுந்து மறைவதைக் கண்டேன். என் உடம்பிலிருந்தும் ஏதோ அச்சமயம் போய் விட்டது. இப்போது வெறும் கூடு மாத்திரமே இருக்கிறது. சகோதரி! இந்தத் தூர் நிமித்தம் என்னோடு போகட்டும். நம் அருமைத் தந்தைக்கும் அருள் மொழிக்கும் ஒன்றும் நேராமல் ஏகாம்பர நாதர் காப்பாற்றட்டும்.

"நானும் நீயும் நம் இளம்பிராயத்தில் சோழ ராஜ்யத்தின் உன்னதத்தைப் பற்றி எவ்வளவோ கனவு கண்டோம். அவற்றை என்னால் நிறைவேற்றக்கூடவில்லை. என் தம்பி நிறைவேற்றுவான். அவன் மூன்று உலகையும் ஆளப் பிறந்தவன். அவனுக்கு வல்லத்திளவரசன் வந்தியத்தேவன் துணைவனாக இருப்பான்.

"தேவி! வந்தியத்தேவன் நீ இட்ட பணிகளை நன்கு நிறைவேற்றினான் என்று அறிந்து திருப்தி அடைந்தேன். இல்லாவிடில் அவனை இங்கே இவ்வளவு முக்கியமான காரியத்துக்கு அனுப்பியிருக்க மாட்டாய். என்னை, என் விதியிலிருந்து, காப்பாற்ற அனுப்பியிருக்க மாட்டாய்.

"சகோதரி! இங்கே எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டால், அதற்கு என் விதியும் என் பிடிவாதமும் தான் பொறுப்பே தவிர வந்தியத் தேவன் பொறுப்பு அல்ல. நீ சொல்லி அனுப்பியபடி அவன் என்னை இந்தக் கடம்பூர் மாளிகைக்கு வராமல் தடுக்க எவ்வளவோ முயன்றான். இந்த மாளிகைக்கு வந்த பிறகு நிழலைப்போல் என்னைத் தொடர்ந்து கொண்டிருக்கிறான். அதற்காகவே இந்த வீட்டுப் பெண் மணிமேகலையைச் சிநேகம் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறான். அவனுடைய உதவியினால், நான் போக உத்தேசித்திருக்கும் இடத்துக்கு முன்னதாகவே போய் ஒளிந்து கொண்டிருக்கிறான். எல்லாம் என்னைக் காப்பாற்றுவதற்காகத்தான்.

"ஆனால் விதியிலிருந்தும் வினை வசத்திலிருந்தும் ஒருவர் இன்னொருவரைக் காப்பாற்ற முடியுமா?

"படம் எடுத்து ஆடும் நாக சர்ப்பத்தின் மோகன சக்தியினால் கவரப்பட்ட சிறிய பிராணிகள் தாங்களே வலியச் சென்று அப் பாம்புக்கு இரையாகி மடியும் என்று கேள்விப்பட்டிருப்பாய்.

"அம்மாதிரியே நானும் நந்தினியிடம் போகிறேன். அவள் நம் சகோதரி என்று எனக்கு எச்சரிக்கை அனுப்பியிருக்கிறாய். அதை நம்ப முடியவில்லை. ஆயினும் அவள் விஷயமான மர்மம் ஏதோ ஒன்று இருக்கிறது. அதை அறிந்து கொள்வதற்கே போகிறேன். எப்படியும் இன்று உண்மையை அறிந்து கொள்வேன்.

"என் விதி என்ன ஆனாலும், வந்தியத் தேவன் பேரில் குற்றம் யாதுமில்லை. அவன் உன் கட்டளையைச் சரிவர நிறைவேற்றி வருகிறான். சகோதரி! அந்த மாய மோகினி நந்தினியின் வலையில் கந்தமாறனும், பார்த்திபேந்திரனும் அடியோடு விழுந்து விட்டார்கள். அப்படி விழாமல் தப்பிப் பிழைத்தவன் வந்தியத் தேவன் ஒருவன்தான்.

"அவனுக்கு என்ன பரிசு கொடுப்பது என்று எனக்குத் தெரியவில்லை. இந்த வீட்டில் மிகச் சூடிகையான பெண் ஒருத்தி இருக்கிறாள். என் உடன் பிறந்த சகோதரியைப் போல் அவள் பேரில் எனக்குப் பிரியம் உண்டாகிவிட்டது. மணிமேகலையை வந்தியத்தேவனுக்குத் திருமணம் செய்வித்தால் அவனுக்கு நல்ல பரிசாக இருக்கும். ஆனால், சகோதரி, உனக்கு இது சம்மதமாக இருக்குமோ, என்னமோ, தெரியாது.

"என் அருமைத் தங்காய்! இந்த ஓலையை அந்தப் பெண்ணிடந்தான் ஒப்புவிக்கப் போகிறேன். நல்ல வேளையாக அவளுக்குப் படிக்கத் தெரியாது. அவளைக் குறித்து உன் விருப்பம் எப்படியோ அப்படிச் செய்! நம் குடும்பத்தில் நீயே மிகச் சிறந்த அறிவாளி. உன் வார்த்தையை நான் தட்டி நடந்தேன். அதன் பலனை அநுபவிக்கப் போகிறேன். தம்பி அருள்மொழியாவது உன் யோசனைப்படி நடந்து சோழ சாம்ராஜ்யத்தை மகோந்நத நிலைக்குக் கொண்டு வருவானாக...."



ந்த இடத்தில் எழுத்து நின்று போயிருந்தது. ஓலையைப் படித்து முடிக்கும்போது குந்தவையின் கண்களிலிருந்து கண்ணீர் சொரிந்தது.

கண்களைச் சட்டென்று துடைத்துக் கொண்டு மணிமேகலையைப் பார்த்து, "பெண்ணே! இந்த ஓலை உன்னிடம் எப்படி வந்தது? யார் கொடுத்தார்கள்?" என்று கேட்டாள்.

"தேவி! இளவரசரே என்னிடம் கொடுத்தார். அவரைப் பற்றி நந்தினி என்ன வெல்லாமோ தவறாகச் சொல்லியிருந்தாள். ஆகையால் எனக்குத்தான், காதல் ஓலை எழுதியிருக்கிறார் என்று முதலில் நினைத்துக் கொண்டேன். இதைத் தீயில் போட்டுப் பொசுக்கிவிட எண்ணினேன். பிறகு, என்ன தான் எழுதியிருக்கிறார் என்று பார்க்கலாம் என்று நினைத்துப் பத்திரப்படுத்தி வைத்தேன். என் தோழி சந்திரமதியிடம் கொடுத்துப் படித்துக் காட்டச் சொன்னேன். என்னைத் தம் உடன் பிறந்த சகோதரி என்று எழுதியிருக்கும் வீர புருஷரை இந்தக் கைகளினால் கொன்று விட்டேன் என்று எண்ணும்போது என் நெஞ்சு துடிக்கிறது.

"எவ்வளவு டாக்டர் ஃபீஸ் தரணும்?"

"நூறு ரூபாய் கொடுங்க..."

"ஐயையோ! என்ன டாக்டர் இது...? ரொம்ப அதிகம்...!"

"சரி... எழுபத்தஞ்சு ரூபா கொடுப்பா...!"

"என்ன டாக்டர் இது...? நான் சம்சாரி... பிள்ளைக்குட்டிக்காரன்..."

"சரி, அம்பது ரூபாய் கொடுப்பா!"

"என்ன டாக்டர் இது...?"

"சரி... இருபது கொடுத்துட்டுப் போ...!"

"டாக்டர் கொஞ்சம் கவனிங்க...!"



"சரி, பத்து ரூபா கொடுய்யா...!"

"டாக்டர்... கொஞ்சம் மனசு வெச்சு...!"

"சரி, அஞ்சு ரூபாயைக் கொடுத்துத் தொலை... இதுக்கு ஏன்யா என்னை மாதிரி 'காஸ்ட்லி' டாக்டரைப் பார்க்க வர்றே...?"

"எனக்கு உடம்பு சரியில்லேன்னா நான் பணத்தைப் பத்திக் கவலைப்பட மாட்டேன், டாக்டர்!"

— கார்த்திக்.

தேவி! படுகொலை செய்த பாதகிக்கு என்ன தண்டனை உண்டோ அதை எனக்குக் கொடுக்கும் படி செய்யுங்கள்!" என்று வேண்டினாள் மணிமேகலை.

அவளுடைய பரபரப்பும், அவள் பேசிய விதமும், அவள் இதைக் கற்பனை செய்து சொல்லுகிறாள், வந்தியத் தேவரைக் காப்பாற்று வதற்காகச் சொல்லுகிறாள் என்பதை நன்கு வெளிப்படுத்தின. குந்தவை அதை அறிந்து கொண்டாள். ஆயினும் அவள் கொண்டு வந்த ஓலை கற்பனை அல்ல. அது கரிகாலரின் சொந்த எழுத்து. வந்தியத் தேவரைச் சிறை மீட்கவும் பயங்கரமான கொலைக் குற்றம் அவர்மீது சாராமல் தடுக்கவும் இந்த ஓலையே போதும். இந்தப் பெண் வாயை மூடிக்கொண்டிருந்தால் ரொம்ப அநுகூலமாயிருக்கும். ஆனால் எப்படி இப் பெண்ணைச் சும்மா இருக்கப் பண்ணுவது?

"மணிமேகலை! இன்னமும் கரிகாலரை நீதான் கொன்றதாகச் சாதிக்கிறாயா!" என்று கேட்டாள்.

"ஆம், தேவி!"

"இந்த ஓலையைப் படிக்கச் சொல்லிக் கேட்டதாகச் சொல்கிறாய். இதில் உன்னை உடன் பிறந்த சகோதரி என்று கரிகாலன் குறிப்பிட்டிருக்கிறான். அவ்வளவு உன்மேல் பிரியம் வைத்திருந்தவனை நீ எதற்காகக் கொல்ல வேண்டும்?"

"ஓலையை முன்னதாகப் படித்திருந்தால் அந்தப் பயங்கரமான காரியத்தைச் செய்திருக்க மாட்டேன். அவருடைய மனத்தை அறியாமல் செய்து விட்டேன். அந்த வஞ்சகி நந்தினியும் என் மனத்தைக் கெடுத்து வைத்திருந்தாள்.

"எந்த விதத்தில் கெடுத்திருந்தாள்?"

"வந்தியத்தேவர் மீது கரிகாலர் துவேஷம் கொண்டிருப்பதாகவும், அவரைக் கொன்றாலும் கொன்று விடுவார் என்றும் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். அதற்குத் தகுந்தாற்போல கரிகாலரும் கையில், வாளைத் தூக்கிக் கொண்டு, 'எங்கே அந்த வந்தியத்தேவன்? அவனை இதோ கொன்று விடுகிறேன்!' என்று கூத்தாடவே, நான் உண்மையென்று நம்பி விட்டேன். உடனே என் கையிலிருந்த கத்தியினால்....."

"பெண்ணே! இந்தப் பேச்சை விட்டு விடு. வீராதி வீரனாகிய ஆதித்த கரிகாலனை ஓர் அபலைப் பெண் கொன்றாள் என்பதை நான் நம்பினாலும் உலகம் நம்பவே நம்பாது."

"தேவி! வேறு யார் கொன்றிருக்க முடியும்? கரிகாலருடைய உடல் கிடந்த இருட்டறையில் வந்தியத் தேவரும் நானும் மட்டுமே இருந்தோம். அவர் கொல்லவில்லை. பின்னே, நான்தானே கொன்றிருக்க வேண்டும்?"

"நீ இப்படிச் சொல்வதினால் இறந்து போன என் தமையனுக்கு அபகீர்த்தி உண்டாக்குகிறாய். மேலும் இன்னொன்று யோசித்துப் பார்! வாணர் குலத்து இளவரசர் நீ கொலைக் குற்றம் செய்தாய் என்பதை ஒப்புக் கொண்டு சும்மா இருப்பாரா? நீ அவரைக் காப்பாற்ற விரும்புவது போல் அவர் உன்னைக் காப்பாற்ற விரும்ப மாட்டாரா? நீ பிடிவாதமாகச் சொல்வது போல் அவரும் 'நான்தான் கொன்றேன்' என்பார். நீ பெண் என்பதற்காக உன்னை ஒரு வேளை மன்னித்து விடுவார்கள். அவரை மன்னிக்க மாட்டார்கள். இராஜ குலத்தினரைக் கொன்ற துரோகிகளுக்கு எவ்வளவு பயங்கரமான தண்டனை விதிக்கப்படும் என்று உனக்குத் தெரியும் அல்லவா? நாற்சந்தியில் நிறுத்தி வைத்து......"

இதைக் கேட்ட மணிமேகலை 'ஓ' வென்று அழுது விட்டாள். தேம்பி அழுது கொண்டே "அக்கா! தாங்கள் தான் அவரைக் காப்பாற்ற வேண்டும்!" என்று கதறினாள்.

(தொடரும்)



# கைவீசு அம்மா கைவீசு

உயிருக்கு உயிராய் வளர்த்த தங்கையை உயிரோடு எரித்துக் கொன்ற வேட்டகத்துக் கும்பலை வேட்டையாடிக் கொன்று போட்டு விட்டுச் சிறைவாசத்தில் தன்னையும் அழித்துக் கொண்டு விட்ட ஒரு பெண்ணின் கதை. முகாந்திரம் — வரதட்சிணைக் கொடுமைப் பிரசாரமாம்!

அடக்கவொடுக்கமும் குடும்பப்பாங்கும் நிறைந்த அக்கா ராதிகா — விளையாட்டுத் தனமும் ஆணுக்குப் பெண் இங்கே இளைப்பில்லை காண் என்று கொட்டமடிக்கும் உமன்ஸ் லிப் தங்கை இருவருக்குள்ளும் எத்தனை அன்னியோன்னியப் பாசம்!

தங்கைக்கு மணமுடிக்க ஏற்பாடு செய்து விட்டு வீடு திரும்பினால் வாசலில் நிரோஷா மணமாலையும், கழுத்துமாய் முரளியுடன் நிற்கக் கண்டு அதிர்ந்து, 'உன் இஷ்டத்துக்கு விரோதமா நான் என்னிக்காவது நடந்திருக்கேனா? உன் கல்யாணத்தைக் கூடப் பார்க்க முடியாமச் செய்துட்டியே!' என்று ராதிகா கண்கலங்க, நிரோஷா அதற்கு மேல் கலங்கி, 'நான் தப்புச் செய்துட்டேன் அக்கா. நீ சம்மதிக்க மாட்டியோன்னு நினைச்சு அவசரப்பட்டுட்டேன்,' என்று நெஞ்சோடு ஒட்டிக் கொள்வதும் சரி; வேட்டகத்துக் கொடுமைகளைத் தாள முடியாமல் அக்காவிடம் வந்து, 'அக்கா, நான் ஒண்ணே ஒண்ணு கேட்பேன், தப்பா நினைக்க மாட்டியே?' என்று கேட்டுக் கொண்டு, 'உன்னைக் கட்டிப் பிடிச்சிட்டு ஒன்னு அழலாமா?' என்று மடியில் முகம் புதைத்துக் கொண்டு நிரோஷா கதற, அவளை வாரியணைத்து ராதிகா யதார்த்த தேறுதல் சொல்லுவதிலும் சரி; நடிப்புக்கு நீயா நானா என்கிறார்கள் இருவருமே.

இந்த அதிகப்படி பிழிசலுக்கு மாற்றுக் கொடுக்கிறோம் பேர்வழி என்று ஒரு காமெடி டிராக் போட்டிருக்கிறார்கள். அதில் கொஞ்சம் சுத்தம் இருந்தால் ரசித்திருக்கலாம்.

வேட்டகத்தில் அத்தனை பேரும் சேர்ந்து கொண்டு விதவிதமாய் இம்சிக்கும் போது, முரளியைக் காதலித்து அவனை மட்டும் நம்பி வந்திருக்கும் நிரோஷா படும் அவஸ்தைகள் நல்லதங்காள் துயரம் போங்கள்!

அந்த வீட்டில் ஒரு புட்டி சாராயத்துக்கும் மூணு வேளைச் சோற்றுக்கும் அடிமைப் பட்டுப்போய் விழுந்து கிடக்கும் ஜெய் கணேஷ் மட்டும் சமயத்தில் அவரிடம் ஆறுதல் சொல்லும் போது வாழ்த்தலாம் போலிருக்கிறது.

கதாநாயகன் முரளி — அத்தனை தீவிரமாய்க் காதலித்தவர் — தம் வீட்டைச் சார்ந்தவர்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை நன்கு அறிந்திருந்தும் — அவர்கள் டிராமாவை அப்பட்டமாய் ஏற்றுக் கொண்டு வீட்டை விட்டுத் துரத்துகிறாரே, அது கன்வின்ஸிங்காய் இல்லை-சார்.

மற்றபடி ஆர்ட் பிலிம் தரத்தோடு மலர்ந்து, யதார்த்தமான வசனங்களில் மணந்து, பாவம் காட்டும் கோணங்களில் இயங்கும் காமெரா ஒளிவீசத் தரம் காட்டும் படம்தான்.

அதுசரி, மொத்தம் ஆறு கொலைகள் செய்து தன்னையும் அழித்துக் கொண்டது வரதட்சிணை ஒழிய வழிகாட்டியதாகுமோ?

— பி. எஸ். எஸ்.



# ஸ்ரீபெட்
# 'PEACOCK'

**உங்கள் சமையலறைக்கு பெருமை சேர்ப்பவை.**

கண்ணைக் கவரும் வண்ணங்களில், கையில் எடுப்பதற்கும் உபயோகிப்பதற்கும் எளிதான, உறுதிவாய்ந்த, பளபளப்பான, நேர்த்தியான பாட்டில்கள். நிரப்புவதற்கு வசதியாக சற்று அகன்ற வாய் கொண்டவை. ஸ்குவாஷ், பழச்சாறு, பால், உப்பு போன்றவைகளை மட்டுமல்லாமல் தண்ணீரையும், வேறு பத்திரப்படுத்த வேண்டிய பொருட்களையும் வைத்துக் கொள்ள ஏற்றவை.

ஸ்ரீபெட் பாட்டில்களும் ஜாடிகளும் கண்ணாடிபோல உள்ளேயிருப்பதை பளிச்சென்று காண்பிப்பவை. உடையாதவை. உணவுப் பொருட்களைப் பத்திரப்படுத்துவதற்கு ஏற்ற தகுதியும் தரமும் வாய்ந்தவை. நெடியற்றவை. கனமில்லாதவை. உபயோகிக்க வசதியானவை.

60 டிகிரி சென்டிகிரேட் வரை உஷ்ணத்தைத் தாங்கக் கூடியவை.






பெட் இண்டஸ்டிரியல்
கன்ஸ்யூமர் பாக்கேஜ்
பிரைவேட் லிமிடெட்,
3வது மாடி, மூகாம்பிகா
காம்பிளெக்ஸ்,
4, லேடி தேசிகாச்சாரி
சாலை, மயிலாப்பூர்,
சென்னை - 600 004.
போன்: 73768/
74960.



* உச்சி வெயில்

# அவார்டுக்கு அனுப்பப்படும் படங்கள்!



* அரங்கேற்ற வேளை



* என் உயிர்த் தோழன்

## சினி சிப்ஸ்:

●● 'குடிசை' என்ற கலைப் படத்தினை வழங்கிய டைரக்டர் ஜெயபாரதி, 'உச்சி வெயில்' என்ற ஒரு கலைப்படத்தினை இருபது ரோல் ஃபிலிமில் எட்டு நாட்களில் எடுத்து முடித்து, அவார்டுக்கு அனுப்பியிருக்கிறார். தியேட்டரில் ரிலீஸ் பண்ண வேண்டும் என்ற நோக்கத்தோடு எடுக்காமல், 'அவார்டை'க் குறிவைத்தே எடுக்கப்பட்ட படம். அது சரி, உச்சி வெயில் என்ற தலைப்பில் இந்திரா பார்த்தசாரதி ஒருநாவல் எழுதியிருக்கிறாரே, அதற்கும் இதற்கும் ஏதாவது சம்பந்தம்? நிச்சயம் டைட்டில் சம்பந்தத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லையாம். படத்தின் நாயகன் அறுபது வயதுப் பெரியவர் குப்புசாமி! 'வா இந்தப் பக்கம்' படத்திற்குப் பின்பு திரையில் (கதாநாயகியாக) வரமுடியாமல் டப்பிங் பேசிக் கொண்டிருந்த உமாதான்! படத்தின் நாயகி! எதையாவது வித்தியாசமாகச் செய்ய வேண்டும் என்று துடிக்கின்ற நண்பர்கள் சிலரின் உதவியுடன் படத்தினை எடுத்து முடித்து தில்லிக்கு அனுப்பி விட்டு நம்பிக்கையோடு காத்திருக்கிறார் ஜெயபாரதி!

●● டெலிவிஷனுக்காக ஒன்றரை மணி நேரம் ஓடக் கூடிய 'சந்தியா-ராகம்' என்ற படத்தினை பாலுமகேந்திரா எடுத்துள்ளார். இப்படத்தின் நாயகன் 'வீடு' புகழ் சொக்கலிங்க பாகவதர்தான். இப்படத்தில் எல்லோரும் 'அர்ச்சனா'வுடைய நடிப்பைத்தான் மிகப் பிரமாதமாகச் சொல்கிறார்கள். படத்தில் அர்ச்சனா கர்ப்பஸ்திரீயாகத் தோன்றுகிறார். இப்படத்தைப் பற்றி மற்றுமொரு செய்தி: படத்தின் ரீரிக்கார்டிங்கிற்கு எல். வைத்தியநாதன் தமது இசை அமைப்பில் புல்லாங்குழலைச் சிறப்பாகப் பயன்படுத்தியுள்ளார். இப்படமும் அவார்டுக்குச் செல்கிறது.

●● அவார்டுக்குச் செல்கின்ற மற்றுமொரு தமிழ்ப்படம், பாரதிராஜாவின் 'என் உயிர்த் தோழன்.' பாடல்கள் எதுவும் ஷூட் பண்ணாமல் படத்தை தில்லிக்கு அனுப்பியுள்ளார். 'இனிய தமிழ் மக்களுக்காக...' நான்கு பாடல்கள் சேர்க்கப்பட்டுப் பொங்கலுக்குத் திரைக்கு வருகிறது என் உயிர்த் தோழன்!

●● சமீபமாகத் தமிழில் ஏகப்பட்ட ரீமேக் படங்கள் வெளிவரத் துவங்கியுள்ளன! எல்லாமே 'அசல்' வேஷம் போட்டு அசத்திக் கொண்டிருக்கின்றன. மலையாளத்தில் ஹிட்டான 'ராமோஜிராவ் ஸ்பீக்கிங்' என்ற படம் தமிழில் ரீமேக் செய்யப்பட்டு, 'அரங்கேற்ற வேளை' என்று பெயர் மாற்றப்பட்டு வெளிவந்துள்ளது. மலையாளத்தில் தன் அஸிஸ்டெண்ட் டைரக்ட் செய்த படத்தினைத் தமிழில் ஃபாசில் டைரக்ட் பண்ணியிருக்கின்றார்! படத்திற்கு ஐந்து கதாநாயகிகள் ஒப்பந்தமாகி, ஒத்துவராமல், ரத்தாகிக் கடைசியில் ரேவதி நடித்துக் கொடுத்துள்ளார். ஹீரோ, பிரபு!

— எஸ். பாலு.

## 25

"எனக்கு நீங்கள் செய்த துரோகத்தை — கட்சிக்கு நீங்கள் செய்த துரோகத்தை மறந்துவிட்டுப் பேசுகிறேன். பதினைந்து வருடங்களுக்கு முன் நீங்கள் கட்சி மேடையில் சொன்ன கவிதைகளை மனத்தில் வைத்துக் கொண்டு பேசுகிறேன். தமிழ்க் கவிஞரென்று யோசிக்கிறேன். எழுத்து மூலமாக உங்கள் மேல் புகார் இருக்கிறது. அத்துமீறி ஒருவர் வீட்டிற்குள் நுழைந்து, நிதானமில்லாமல் நடந்ததாக ரிப்போர்ட் வந்திருக்கிறது. நடவடிக்கை எடுங்கள் என்று சொல்லிவிடலாம், தாங்க மாட்டீர்கள். ஓர் ஆசிரியர் அவமானப்படுத்தப்படக் கூடாதென்று நினைக்கிறேன். உங்கள் மாணவர்கள் முன்னால் நீங்கள் நிற்க முடியாமற் போய்விடும் என்று யோசிக்கிறேன். சொல்லுங்கள், நான் என்ன செய்யட்டும்?"

சோபாவில் அழுந்தச் சாய்ந்து கொண்டு முதல்வர் பேசினார். ஹால் முழுவதும் கட்சி ஆட்களும் அதிகாரிகளும் நிறைந்திருந்தார்கள்.

"இந்தப் பத்து வருடங்களில், அவர் நல்லாச் சம்பாதிச்சிட்டாருங்க. நீங்க பேசறது அவர் காதிலே விழாது!" யாரோ எடுத்துக் கொடுத்தார்கள்.

"காது கேட்கும்படியாச் செய்துடலாம். இந்தக் கட்சி, எனக்கு இந்தச் சின்னம்னு நின்னவங்க மேல கோவமேயில்லை. உங்களை மாதிரி..."

"இவரு பச்சோந்திங்க. இவரண்ட நாம பேசறதே அசிங்கம்."

"என்ன செய்யலாம் இவரை?"

"இது குடும்பச் சண்டைங்க. நம்ம மேடைக்கு வந்தா தலையைத் தட்டி அனுப்பலாம். அந்த அம்மாவுக்குக் கேவலமாயிடும். பத்திரிகையில பெரிசு பண்ணி அந்த அம்மா போட்டோ போட்டுடுவாங்க. அந்த அம்மா டீச்சர் வேற. வேலைக்குப் போக முடியாது போயிடும்."

"உண்மை. மறுபடி செய்தார்னா?"

"ஆயிரம் ஊழலு இருக்கு இவரு கல்லூரில. இவரு கைவண்ணமா. ஒரு வார்த்தை சொல்லுங்க. பிரிச்சுத் தோரணம் கட்டிடறோம்."

"இந்த முறை மன்னிச்சு விடறேன் கதிரேசன். லீவு போட்டுட்டுப் போங்க. நான் உங்க கல்லூரி தமிழ் மன்றத்துக்கு வர்ற போது நீங்க இருக்கக் கூடாது. போகலாம்."

படியிறங்கி வந்தபோது, உடம்பெல்லாம் ஆடியது. கதிரேசனுக்கு. வயிறு குழைந்து கெஞ்சியது.

# இரண்டாவது சூரியன்

பழிவாங்கறேன்னு உடனே அழுவாங்க. போயும் போயும் இந்த ஆளையா நான் பழிவாங்கணும். நம்ம மேடையிலே கவிதை கத்துக்கிட்ட தம்பி இது. இங்கே கத்துக்கிட்டு, வேற இடத்துலே கடை போட்டுட்டாங்களே. என் கவிதையை உனக்குக் கம்பளமாய் விரிக்கிறேன்னு போன வருஷம் கூட மேடையில பாடினாரு. தமிழ்க் கவிதையை மாலையாப் போடட்டும்; துண்டாப் போர்த்தட்டும்; நடை பாவாடைன்னாரே எரிஞ்சு போச்சு எனக்கு. கால்ல விழறதுக்கும் ஓர் அளவு வேணாம்? மானங்கெட்டத்தனம்!"

"அதுக்குத்தான் போட்டி அங்கே. நீ வெறும் கால்ல வுழுந்தியா, நான் பாரு கரணம் அடிச்சுக் கால்ல விழறேன்னு போட்டி. இவருபூமிக்கு அடியிலேயேபோயிட்டவரு."

"என்ன கதிரேசன், எத்தனை பேர் கோபப்படறாங்க, பாருங்க. உங்க மேலே இல்லை; உங்கள் கவிதை மேலே. நான் "பைத்தியமாய்யா பிடிச்சுடுச்சு உனக்கு? அந்த அம்மா எழுதிக் கொடுத்த ரிப்போர்ட்டுக்கு போலீஸ் கேஸ் ஆச்சுன்னா அஞ்சு வருஷம் உள்ளே தள்ளிடுவாங்க. இன்னிக்கு முழிச்ச வேளை நல்லவேளை. தலைக்கு வந்தது தலைப்பாகையோட போச்சு. எங்கேயாவது கண்காணாத போயிடுங்க."

"இல்லீங்க, மனசு உளைச்சலாப் போயிடுச்சு. கொஞ்சம் சாப்பிட்டேன். தடுமாறிட்டேன். இனிமே இப்படி நடக்காதுங்க."

"ஏன் கண்டது சாப்பிடறது, கஷ்டப்படறது? நாப்பது நாப்பத்தஞ்சு வயசு தானே.? பேசாத இன்னொரு வாட்டி மறுபடி புதுசா வாழ்க்கையைத் துவங்குங்க ப்ரதர். உங்க கவிதையை மறுபடி கேட்

பாலகுமாரன்

> **உலகிலேயே மிகச் சிறந்த சீர்திருத்த வாதி, தன்னைத் தானே சீர்திருத்திக் கொள்பவன்தான்!**
>
> **— பெர்னார்ட்ஷா.**
>
> **தகவல்: கே. ஜி. எஃப். பழனிச்சாமி.**

கணும்.''

''ஐயா, நீங்க எப்ப தலைவரு கட்சியிலே சேர்ந்தீங்க.''

''நான் சேர்ந்து வருஷம் ஆச்சு. அவரு இருக்கச் சொல்லவே இங்கே வந்துட்டேன். ஏன்?''

''இல்லை, இவரு பக்கம் சேர்ந்துட்டா...?''

''யோவ் போய்யா. கிட்ட வந்தா முழுங்கிடுவீங்களே.''

''கோவிச்சுக்காதீங்க தோழரே... நாமெல்லாம் ஒண்ணா இருந்தவங்க. ஏதோ சந்தர்ப்பவசம்...''

''சந்தர்ப்பவசமா? கொழுப்பு. ரத்தக் கொழுப்பு. ஒண்ணு செய். பேசாத சன்னியாசியாயிடு. இல்லை இன்னொண்ணைக் கட்டிக்கிட்டு சம்சாரியா இரு. ஊர்ல இந்த இரண்டு இடத்துக்குத்தான் மதிப்பு. வெள்ளைச் சட்டை போட்டுத் தனியா இருந்தா அசிங்கம் பண்ணத்தான் தோணும். உங்க கட்சிக் கூட்டம் பேசற பொண்ணுங்க எத்தனை இல்லை? ஒண்ணைக் கட்டிக்கிறது... கௌரவமா இருக்கும் இல்லை?''

**கீ**ழ் வராந்தாவின் கதவுக்குப் பின்னே பானுமதி நின்றிருந்தாள். கதவு இடைவெளி வழியே பார்த்தாள். அகலமான முதுகு நகர்ந்து வாசல் வழியே இறங்கிப் போயிற்று.

''என்ன தேடறீங்க?''

''ஒரு ஜீப்ல கூட்டி வந்தாங்க. அது எங்கேன்னு...?''

''அப்படித் திரும்புங்க, ஆட்டோ கிடைக்கும். புடிச்சுப் போங்க.''

''ஏம்பா ஆட்டோ வருமா?''

''இல்லீங்க. சவாரி மீட்டர் கட் பண்ணலை.''

''அந்த முனைல விட்டுடுப்பா.''

''முடியாதுங்க.''

என்ன செய்வது என்று தெரியாமல் பானுமதி சற்றுத் தயங்கினாள். நடந்து போக — சிறிது தூரம் கூட நடக்க கௌரவம் இடம் கொடுக்கவில்லை போலும். தலைவர் வீட்டில் உள்ளவர்களுக்குக் கைகூப்பி வணக்கம் சொல்லி விட்டு வெளியே வந்தாள். படியிறங்கினாள்.

அந்த ஆள் திகைத்தார். இத்தனை நேரம் உள்ளே இருந்தாயா என்பது போல் பார்த்தார். படியிறங்கி வாசல் தாண்டி வண்டியில் ஏறியவளையே வியப்போடு பார்த்தார்.

''வீட்டுக்குப் போகலாம்பா,'' பானுமதி உத்தரவிட்டாள்.

வண்டி நாலைந்து முறை ஹாண்டில் இழுத்துக் கிளம்பத் தவித்தது. அந்த ஆள் வண்டிக்கு அருகே வந்தார்.

''அந்த முனைல இறங்கிக்கட்டுமா?''

பானுமதி பேசாதிருந்தாள்.

வண்டி தடதடத்து எஞ்சின் சுழன்றது.

''ப்ளீஸ் உடம்பு நல்லா இல்லை. அதான்.''

''நோ... சீக்கிரம் போப்பா.''

வண்டி ஒதுங்கிக் கிளம்பிற்று. தெரு திருப்புமுனையில் உடம்பு திருப்பிப் பின்பக்க பிளாஸ்டிக் ஷீட் வழியே பார்த்தாள். அவர் நடந்து வந்து கொண்டிருந்தார்.

உள்ளே இனம்புரியாத சந்தோஷம் பொங்கிற்று. உடம்பு உதறிப் போட்டது.

'நட, நட, நடந்து வா. பூமியில் கால் பதித்து ஒவ்வோர் அடியாய் எடுத்து நடந்து வா. கனவில் மிதந்தவன் நீ. கர்வத்தில் புரண்டவன் நீ. கவிதைகளில் சவாரி செய்தவன் நீ. நட, நட, நடந்து வா.'

''உங்களுக்குத் தெரிஞ்சவராம்மா?'' ஆட்டோக்காரன் கேட்டான்.

''யாருப்பா?''

''அந்தாளு.''

''தெரியாது.''

''பார்த்தால் படிச்ச மனுஷன் மாதிரி இருக்கான். லேசுல ஆட்டோல இடம் கேட்கறான் பாருங்களேன்.''

''படிச்ச மனுஷன்தான் இப்படிக் கேட்பான். படிக்காதவன், கேட்க மாட்டான்.''

''அது கரெக்ட்.''

ஆனால் வார்த்தைகளால் ஆறவில்லை. மறுத்த செய்கையால் குறையவில்லை. உள்ளே இன்னமும் பொருமிற்று. சகலமும் மறந்து,தான், தன் குழந்தைகள், தன் வீட்டு வேலைக்காரி, தன் சிநேகிதன், தன் மாணவிகள் என்று வாழ்க்கையைத் துவங்க, வீட்டுப் படியேறி எல்லோர் முன்பும் மறுபடி ஆடி அவமதித்த வெறுப்பு இன்னமும் பொங்கிற்று. ஆனால் இதற்கு மேல் எடுத்துப் போக முடியாது. மன்னித்து விடுவித்து விட்டார்கள். எப்போதோ பாடின கவிதைகளுக்கு இப்போது இரக்கப்பட்டு விட்டார்கள். கோர்ட்டில் ஏற்றி, அவமானப்படுத்தி, ஊர் சிரித்திருக்க வேண்டும். எனக்குக் கெடுதல் வரும் என்று விட்டு விட்டார்கள். உள்ளே போய் எனக்கு எந்த அவமானமும் இல்லை; இவர் செய்த காரியத்துக்கு உரிய நடவடிக்கை எடுங்கள் என்று பேசியிருக்க வேண்டும்.

பேசியிருக்க முடியுமா?

வியப்பார்கள். என்ன இந்தப் பொம்பளை இவ்வளவு கோவப்படுதே. தலைவர் முன்னாடியே எனக்கு அவமானம் இல்லைன்னு சொல்லுதே. ஒருவேளை இது தப்போ? கவிஞர் பாவம்தானோ? தலைவரு ஏதோ புரிஞ்சுதான் கேஸை தள்ளிவிட்டாரோ என்று பேசுவார்கள்.

மறுபடி இனி எந்தச் சமயமும் எந்த

கோர்ட்டுக்கும் கூட்டிப் போக முடியாது. இன்னொரு முறை வம்பு செய்தாலொழிய இனி பெரிசுபடுத்த முடியாது. மறுபடி வம்புக்கு வரமாட்டான்; எதிர்ப்புக் காட்ட மாட்டான்.

ச்சே, நான் உதைத்திருக்க வேண்டும். என் காலால் நான் எட்டி உதைத்திருக்க வேண்டும். என் கையால் ஆத்திரம் தீர கழுத்தைப் பிடித்துத் தள்ளியிருக்க வேண்டும். வந்த நேரத்தில் வயிறு கலங்கி நின்றுவிட்டுப் பிறகு பொருமுகிறேன். நோ என்கிற மறுப்புக் கூடச் சொல்லாமல் வந்திருக்க வேண்டும். பேச்சே காதில் விழவில்லை என்று போயிருக்க வேண்டும். இல்லை, ஐயோ என்று புடைவைத் தலைப்புப் பிடித்து அலறி மறுபடி வீட்டுக்குள் ஓடி, அந்த ஆள் அடிக்க வர்றான் என்று கூவியிருக்க வேண்டும். ஆண் ஆணவம் காட்டுகிற போது, பெண் தந்திரம் காட்டியிருக்க வேண்டும். முகம் முழுவதும் குத்துக்கள் விழுவதை ரசித்திருக்க வேண்டும். உள்ள புடிச்சுப் போடு என்று உத்தரவிடப்பட்டிருக்க வேண்டும். தரதர வென்று, தள்ளப்பட்டுப் போகும் காட்சியைக் கண்ணாரக் கண்டிருக்க வேண்டும்.





**ஒருவர்:** உங்க பையனுக்குக் கடவுள் பக்தி ரொம்ப அதிகம் போலிருக்கே...!

**நண்பர்:** உங்களுக்கு எப்படித் தெரியும்?

**முன்னவர்:** பிள்ளையார் எறும்பைப் பார்த்தாலே தலையில் குட்டிக்கிறானே!

— வி. கி. குமார்.

---

என் வீட்டு வாசலில் என் குழந்தைகளை என்னை நாலு பேர் பரிதாபமாய் வேடிக்கைப் பார்த்தார்கள் அல்லவா? என் குழந்தைகள் நெஞ்சு பதற அலறினார்கள் அல்லவா! என் வீட்டுக்கு விருந்துக்கு வந்தவனை அசிங்கம் பண்ணி அவனால் அப்புறப்படுத்தப்பட்டாயல்லவா! உன்னை அவமதித்தே தீர வேண்டும். உன் வேதனைதான் உன்னை உனக்கு இனம் காட்டும். பிறர் வேதனையைப் புரிந்து கொள்ள வைக்கும்.

எனக்கு பலம் இல்லை. படபடப்பு இருக்கிறதே தவிர, பலம் இல்லை. பலம் பெறுகிற பக்குவம் இல்லை. சட்டென்று தலைவர் வீட்டுக்கு ஓடினது தப்பு. என் குமுறல் — என் வேதனை அவருக்குப் புரியவில்லை. என் கோபம் யாருக்கும் தெரியவில்லை. 'அந்த அம்மா டீச்சரு வேலைக்குப் போக முடியாம போய்டும்; பத்திரிகைல அவங்க பெயர் போட்டோவோடு பெரிசு படுத்திடுவாங்க.' எனக்காக விசாரணை நடந்தது. என்னை முன்னிட்டு மன்னிப்புக் கிடைத்தது. ஒரு சந்தோஷம். அவனால்தான் தலைவரைத் தெரியும் என்று இனி அலட்ட முடியாது. இன்று என்னால்தான் மன்னிப்புக் கிடைத்திருக்கிறது. அவனுக்கு மன்னிப்புக் கிடைத்ததே எனக்கு வேதனையாய், பொருமலாய்ப் போய்விட்டது.

ஆனால் அது அவமானமா? உண்மையில் பத்திரிகைகளில் என் பெயர், போட்டோ வந்து குடும்ப விவகாரம் வெளியானால்தான் எனக்குத் தலைகுனிவா? வேதனையா? நடமாட முடியாமல் போகுமா?

நோ. இல்லை. அந்தக் காலம் மலையேறி விட்டது. மத்திய மந்திரி மீது புகார் சொன்ன பெண், ஆங்கில வாரப் பத்திரிகையில் தலைநிமிர்த்தி நிற்கிறாள். தர்ணா செய்கிறாள். அத்துமீறிய புரொபஸரை எதிர்த்து, மாணவி உண்ணாவிரதம் இருக்கிறாள். அவளுக்குத் துணையாய் ஆயிரம் மாணவ மாணவிகள் இருக்கிறார்கள். ஆண் அட்டகாசம் செய்தால் பொறுத்து அடங்கிப் போகும் காலம் மலையேறி விட்டது. முள் வாழையிலை மீது பட்டாலும் வாழை முள் மீது பட்டாலும் என்கிறது பொய்த்துவிட்டது. பெண் கள்ளிச் செடி மாதிரி முள்ளோடு வளரத் துவங்கி விட்டாள். அவள் வாழையில்லை. தொட்டால்சிணுங்கி மரமில்லை. கொழுக்கொம்புத் தேடும் கொடியில்லை. காற்றில் அசையும் நீர்த் தாவரமில்லை. செந்தாமரையில்லை. அவள் குத்துச் செடி. கள்ளிக் காடு. கைகீறும் முள்செடி.

எனக்காகத் தலைவர் மன்னித்திருக்க வேண்டாம்.

தலைவர் யோசிக்கும் முன், யாரோ யோசிப்பைத் திசைமாற்றிப் பேசி விட்டார்கள்.

'இந்த ஆள் பச்சோந்திங்க.' அப்பா, எவ்வளவு இழிவான வார்த்தை! இதைக் கேட்டுவிட்டு எப்படி ஆட்டோவில் இடம் தேடத் தோன்றிற்று உனக்கு? கருண்டு விழுந்து செத்துப் போகாமல் எப்படி நடக்க முடிந்தது உன்னால்?

பச்சோந்தி என்கிற பட்டத்தை உடனே உண்மையாக்கத் துடித்தது எப்படி? தலைவரு கட்சில சேர்ந்துட்டா... என்று உடனே — அடுத்த ஐந்தாவது நிமிடமே யோசிக்க முடிந்தது எங்ஙனம்? இதற்கு என்ன காரணம்?

ஆணவம். எல்லாம் துடைத்துவிட்டு மறுபடி எழுந்து நிற்க முடியும் என்கிற ஆணவம். 'உங்க கட்சில கூட்டத்தில பேசற பொண்ணுங்க இல்லை? எதையாவது கட்டிக்கிட்டு நிம்மதியா இரேன்!' எப்படி உபதேசிக்கிறார்கள். 'ஒன்று சாமியாரா இரு; இல்லை சம்சாரியா இரு. அப்பத்தான் மதிப்பு. வெள்ளை வேட்டி கட்டிக்கிட்டுத் தனியா இருக்காதே.'

அப்போது பெண்?

நான் சாமியாராக முடியுமா?

நான் மறுபடி சம்சாரியாக முடியுமா?

சாமியார் ஆவது என்றால் சகலமும் துறப்பது. பள்ளியை, குழந்தைகளை, வீட்டை, படிப்பைத் துறப்பது முடியுமா?

சம்சாரி ஆவது எனில்...? இன்னொரு திருமணமா? சேர்ந்திரு என்று ஆணிடம் சொல்லப்படுகிறது. எனக்கு என்ன சொல்வார்கள்? தனித்திரு. நீ உனக்கு உன் வேலை, உண்டு உன் குழந்தைகள் உண்டுன்னு இரு. ஏன்? எதற்கு? எதனால் இந்த நிபந்தனை? பானுமதி யோசித்தாள். ஆட்டோ சிக்னலில் நின்றது.

எதிர் சிக்னலில் மோட்டார் சைக்கிளில் பரத் நின்றான்.

பானுமதி தலைநீட்டி, "பரத்" என்று கூவினாள். வண்டி கிளம்பியது. மறுபடி கூவினாள். பரத் கவனித்ததாகத் தெரியவில்லை. கவனித்தது போலவும் இருந்தது. இல்லாதது போலவும் தோன்றிற்று.

"திருப்பட்டுமாம்மா?"

"நேரேயே போப்பா..."

வண்டி நேரே போயிற்று.

(தொடரும்)

# எழுதவேண்டும் எங்களுக்கு!...

மேலும் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற எனது நீண்ட நாளைய விருப்பம் உங்களது பயிற்சியின் மூலம் நிறைவேறும் என நம்புகிறேன். எனவே முன்-கண்ட எனது முகவரிக்கு இப் பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் அனுப்புமாறு வேண்டுகிறேன்.

இப்படிக்கு

15

விவேகானந்தா கல்வி நிலையம்
9 மேட்லி ரோடு,
தி நகர்,
சென்னை
PIN 600017

★ வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற விருப்பம் உடையவரா நீங்கள்?

★ ஆங்கில மொழியில் போதிய புலமை யின்மையினால் உங்களது முன்னேற்றம் தடைபடுகிறதா?

★ மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை ஓரளவு புரிந்து கொண்டாலும், அவர்களிடம் ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறதா?

★ ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற உங்களது விருப்பம் நிறைவேற பல வழிகளில் முயன்றும், பல புத்தகங்களைப் படித்தும் நீங்கள் எதிர்பார்த்த முன்னேற்றம் ஏற்படவில்லையா?

★ இக்குறைகளை யாரிடம் கூறுவது, எப்படித் தீர்வு காண்பது என்பது பற்றி சிந்தித்து வருகிறீர்கள் அல்லவா?

கவலையை விடுங்கள்.

தயக்கமின்றி ஆங்கிலத்தில் சரளமாக உரையாட வேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற வேண்டும் என்ற உங்களது நீண்ட நாளைய விருப்பம் நிறைவேற ஓர் எளிய பயிற்சி முறையினை தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் அளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் முறையில் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். "நேர்முகப் பயிற்சியும் உண்டு".

இன்றே ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதலாமே எங்களுக்கு.

நீங்கள் எழுத வேண்டிய முகவரி:

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**த. பெ. எண் 4986,**
**9, மேட்லி ரோடு, தி.நகர்,**
**சென்னை 600 017.**

# விஞ்ஞானம் முன்னேறும்; மனிதத்தன்மை முன்னேறுமா?

## 23

நம் சூரியக் குடும்பத்தை விட்டு விலகி, நம் சொந்த காலக்ஸியான பால்வீதியின் விளிம்புக்கு வந்து, அதிலிருந்து ஆண்ட்ரமீடா போன்ற அடுத்த நட்சத்திரக் குவியல்களுக்குச் செல்வதன் முன், நம் மனித குலத்தின் வாழ்நாட்கள் நிச்சயம் முடிந்து விடும். நாம் இருப்பது சூரிய பகவான் தயவால். கொஞ்சம் யோசித்துப் பார்த்தால், நம் அத்தனை சொத்துச் சுதந்திரங்களும் சூர்யாரம்பம் பெற்றவை என்பது புரியவரும். நம் மழை சூரியன்; நம் மின் உற்பத்தி — சூரியன்; நம் பெட்ரோல், கரி, நம் எலும்புகள், நம் தசைநார்களில், நம் செல்களில், உயிரணுக்களில் பொதிந்துள்ள சக்தி எல்லாமே சூரிய சக்தியின் வெவ்வேறு சிறைப்பட்ட வடிவங்கள் தாம்.

சூரியன் ஆறிக் கொண்டு வருகிறது. ஒரு நாள் குளிர்ந்து, தளர்ந்து, இருண்டு, மனித குலம் அழியப் போகிறது. அதற்குள் வேறு ஏற்பாடு ஏதாவது பண்ணியாக வேண்டும்.

பயப்படாதீர்கள். அந்த நாள் வர இன்னும் பல கோடி வருடங்கள் உள்ளன. அதற்குள் இந்தக் கட்டுரைத் தொடர் படிப்பவர், படித்தவர் அனைவரும் கோஷ்டியாகச் சொர்க்கம் போயிருப்போம். (அங்கே லைப்ரரி இருக்குமா?)!

அடுத்த நூற்றாண்டில் நிச்சயம் பிரபஞ்சம் முடியப் போவதில்லை. நாம் இந்தக் கட்டுரைத் தொடரின் துவக்கத்தில் சொன்னதற்கு ஏற்ப நூறு வருஷம் என்பது மனித சரித்திரத்தில் ஒரு திருண மாத்திரம். எனினும் மில்லெனியம் என்று சொல்லப்படும் நூறு நூறு வருடங்களின் தன்மை வேறுபடுகிறது. அரிஸ்டாட்டில் காலத்து நூறு வருடங்களும் இன்றைய இருபத்தோராம் நூற்றாண்டின் நூறு வருடங்களும் விஞ்ஞானக் கண்டுபிடிப்புக்களின் அவசரத்தில் வேறுபட்டவை. இதனால் அடுத்த நூற்றாண்டு, மனித குலத்திற்கு அதன் புத்தி ஜீவனத்தில் மிக முக்கிய நூற்றாண்டாகிறது.

மருத்துவத்தில் அடுத்த நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே இதயம் வெல்லப்படும் என்கிறார் பிரசித்த கார்டியாலஜிஸ்ட் டாக்டர் வி. லக்ஷ்மிகாந்தன்.

மாற்று இதய அறுவைச் சிகிச்சைகள் சாதாரணமாக ஜில்லா தலைமை ஆஸ்பத்திரிகளிலேயே வந்து விடலாம். செயற்கை இதயமும், தற்போது அத்தனை வெற்றி இல்லாவிட்டாலும், அடுத்த நூற்றாண்டின் துவக்கத்தில் கைக்கடக்கமாக வந்து அவ்வப்போது நெஞ்சைப் பிடிக்கிறது போல் வலித்தால், பாட்டரி மாற்றிக் கொள்ளலாம்.

டாக்டர் லக்ஷ்மிகாந்தன் இதயத்துக்கு ரத்தம் சப்ளை செய்யும் குழாய் அடைப்புச் சிகிச்சையில் லேசர் முறைகள் வந்து பிரமிக்கத்தக்க மாறுதல்கள் வந்துவிடும் என்கிறார். ரத்தக்குழாயில் பாதிக்கப்பட்ட ஸ்தலத்துக்கு ஃபைபர் ஆப்டிக் நூல்களைச் செலுத்தி அடைப்பை லேசர் கதிர் மூலம் கரைத்துப் பூண் போட்டு... ஆபரேஷனே இல்லாமல் அடுத்த நூற்றாண்டில் சிகிச்சை கிடைக்கும்... என்கிறார்.

நாம் முன்பு சொன்னது போல, மூளையைத் தவிர மற்ற எல்லாப் பாகங்களையும் அவ்வப்போது மாற்றிக் கொள்ள முடியும், இந்த மருத்துவத்தில். ஆதார ஆராய்ச்சிகளில் கான்ஸருக்குக் காரணம் கண்டு பிடிக்கப்பட்டு... தாக்கப்பட்ட உயிரணுக்களுக்குக் கிடைத்த தப்பான ஜெனட்டிக் செய்தியை மாற்றி விடுவார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது. சில சமயம் தமிழ் சினிமா வில்லன் ஒரு காட்சியில் சட்டென்று திருந்திக் கதாநாயகனிடம் மன்னிப்புக் கேட்டுச் சுபம் போடுவதற்கு முன் எல்லோரும் கண்ணை ஒத்திக் கொண்டு சிரிப்பது போலக் கான்ஸர் செல்களை, அவைகளின் கான்ஸர் குணத்தைத் திருத்திவிட முடியும் என நம்புகிறார்கள்.

செல் எனப்படும் உயிரணுக்களின் மாலிக்யூல் அமைப்பில்தான், நம் வாழ்வதின், சாவதின் ரகசியம் பொதிந்திருக்கிறது. அவைகள் இரட்டிப்பாகும் விந்தை ஒரு சந்தர்ப்பத்தில் நின்று போவதுதான் சாவின் ஆதார சமாசாரம். தினம் தினம் நாம் கால் பாகமாவது செத்துக் கொண்டுதான் இருக்கிறோம். இழப்பதைப் புதுப்பிப்பதால்தான் தொடர்கிறோம். இந்த விந்தை நின்று போனால் ஆள் காலி; தோற்றம் — மறைவு என்று பேப்பரில் விளம்பரம்.

அடுத்த நூற்றாண்டில் சாவு என்பது என்ன என்பதை எமன் நசிகேதனைக் குழப்பிவிட்டதைப் போல அல்லாமல், சிறப்பாக — தெளிவாக அறிந்து கொள்வோம். சாவை நம்மால் அடுத்த நூற்றாண்டிற்குள் வெல்ல முடியாது. ஆனால் சாவு அத்தனை பயம் காட்டுவதாக இருக்காது. அதன் மார்பிடிட்டி (morbidity) குறையும்.

எலெக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் விந்

தைகள் ஒரு விளிம்பு வரை வந்துவிட்டன. அண்மையில் சிங்கப்பூரில் சிஸ்டம்ஸ் '89 என்கிற ஒரு கண்காட்சிக்குப் போனபோது, கொரியா ஜப்பான் போன்ற நாடுகள் இந்த இயலில் மிக முன்னேற்றம் அடைந்து கொண்டு வருவதைக் கண்கூடாகப் பார்க்க முடிந்தது. க்ராஃபிக்ஸ் வரைபடங்கள், பேச்சு, எழுத்துக்கள், விடியோ எல்லாமே டிஜிட்டல் ரூபமாகிக் கம்ப்யூட்டரால் அவை சமமாகச் சமாளிக்கப்பட்டு, அபரிமிதமான தகவல் அலகும் சாதனமாகக் கம்ப்யூட்டர் மாறப் போகிறது. அத்தனை சக்தியை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று திணறப் போகிறோம். தகவல் வெள்ளத்தில் திக்குமுக்காடப் போகிறோம். அடுத்த நூற்றாண்டில் உலகத்தில் ஒருவர் விடாமல் அத்தனை பிரஜைகளையும் பற்றிய ஏதாவது ஒரு செய்தி எங்காவது ஒரு கம்ப்யூட்டரின் காந்த அல்லது செமி கண்டக்டர் ஞாபகத்தில் இருந்தே தீரும்.



° சிங்கப்பூர் கம்ப்யூட்டர் கண்காட்சியில் இந்தியத் தூதுவருடன் சுஜாதா . . .

இந்தியக் கம்ப்யூட்டர் இயல், நூற்றாண்டின் இறுதிக்குள் முன்னேற்ற நாடுகளை எட்டிப் பிடித்துவிடும். கம்ப்யூட்டர் இயலில் சாஃப்ட்வேர் எழுதுவதற்கு ஏகப்பட்ட ஜனங்கள் தேவையாயிருக்கிறார்கள். நம் மக்கள் தொகைப் பெருக்கம், அடுத்த நூற்றாண்டில் கம்ப்யூட்டர் இயலில் மட்டும் பலமாகி அதன் மூலம் சம்பாதிக்கும் காசைக் கொண்டு ஏழ்மையைச் சமாளித்து விடலாம் என்று தோன்றுகிறது. இதனால் நான் கு. க. வுக்கு எதிராளி என எண்ணாதீர்கள். மக்கள் தொகைப் பெருக்கம் என்பது ஒரு மூர்க்க நியதி. இதை நம் தற்போதைய அரை மனது முயற்சிகளால் கட்டுப்படுத்தவே முடியாது. மேலும் நம் ஆதார ஜனநாயக அமைப்பினால் தற்போதைய ஏழ்மையினால், அறியாமையால் ஜனப் பெருக்கம் கணிசமாகக் குறைய வாய்ப்பே இல்லை.

கம்ப்யூட்டர் இயலால் இந்தக் குறையை நிறையாக்கும் சாத்தியம் உள்ளது. மற்றெல்லாத் துறையிலும் மனித முயற்சி குறைந்து கொண்டிருக்க, கம்ப்யூட்டருக்கு ஆதாரமான சாஃப்ட்வேர் எழுதுவதற்கு மனிதர்கள் தொடர்ந்து தேவைப்படுவார்கள். சாஃப்ட்வேர் ஆணைத் தொடர்களை அமைப்பதில் சில tools உபகரணங்களைக் கொண்டு வந்திருக்கிறார்களே தவிர, அதன் சிந்தனைப் பகுதியில் கைவைக்கவில்லை. முன்பெல்லாம் விறகடுப்பில் சமையல் செய்து வந்தார்கள். இப்போது காஸ், குக்கர், மைக்ரோவேவ் ஓவன் என்று வந்துவிட்டது. இருந்தாலும் சமையற்காரர்கள் தேவை. அவர்கள் இருந்தால்தான் வாய்க்கு ருசியாகச் சமைக்க முடியும்; புதிய புதிய தின்பண்டங்கள் செய்து பார்க்க முடியும். ஸாஃப்ட்வேரும் அப்படித்தான். புதிய கருவிகள் வந்துவிட்டன. இவைகளை Case Tools என்கிறார்கள். (Computer Aided Software Engineering) கம்ப்யூட்டருக்கு ப்ரோக்ராம் எழுதக் கம்ப்யூட்டரே உதவி செய்கிறது. ஆனால் இன்னும் எழுதுபவரைப் பதவி நீக்கம் செய்யவில்லை. இது அடுத்த நூற்றாண்டின் பிற்பகுதியில் வரலாம்.

நம் இந்தியத் திறமை நிச்சயம் ஸாஃப்ட்வேரில் இருக்கிறது. சிங்கப்பூர் கம்ப்யூட்டர் கண்காட்சியில் இந்தியாவிலிருந்து பாண்டிச்சேரி ஆரோலெக் நிறுவனத்திலிருந்து வந்திருந்த இன்ஜினியர்கள் வெங்கி, ப்ரகாஷ் இவர்களைச் சந்தித்தேன். இவர்கள் அங்கே காட்சிக்கு வைத்திருந்த கம்ப்யூட்டர் கார்டுகள், கொரியா, சீனா, ஜப்பான் நாட்டின் தரத்திற்கு எந்த விதத்திலும் தாழ்ந்தவை அல்ல. ஆரோலக் போன்ற நடுத்தர அளவு கம்பெனிகளுக்கு அடுத்த நூற்றாண்டில் சிறந்த எதிர்காலம் உள்ளது.

கம்ப்யூட்டர் இயலில் பெரிதாகப் பேசப்படப் போவது 'எக்ஸ்பர்ட் சிஸ்டம்ஸ்'

# சுஜாதா

## சென்றவாரப் புதிர்களின் விடை:

I. டெர்னரி (Ternary) மூன்றை அடிப்படையாகக் கொண்ட நம்பர் அமைப்பில் 121 என்பது 16 (9+6+1) ஆகும்.

II. 'இ,' 'உ' இரண்டும் தப்பு. மூன்று தப்புக்கள் இருக்கின்றன என்று சொன்னதுதான் மூன்றாவது தப்பு.

III. இடமிருந்து வலம்:
1. தீ தீ தீ தீ
2. பா பா பா பா
3. வ வ வ வ
4. ளி ளி ளி ளி

மேலிருந்து கீழ்:
1. தீபாவளி; 2. தீபாவளி; 3. தீபாவளி; 4. தீபாவளி.

IV. மூன்று பழம்.

V. கிளி செவிடு.

VI. காப்பியில் இவன் சர்க்கரை கலந்திருந்தான்.

நாலெட்ஜ் இன்ஜினியரிங் இவ்விரு இயல்கள்தான் என்று சொல்கிறார்கள். இவைகளைப் பற்றி முந்தைய ஒரு அத்தியாயத்தில் கொஞ்சம் சொல்லியிருந்தாலும் இந்தக் கடைசி அத்தியாயத்தில் அவைகளைப் பற்றி மேலும் விவரிக்க விருப்பம்.

எக்ஸ்பர்ட் சிஸ்டம் என்பது என்ன? அவை ஒரு வகையான கம்ப்யூட்டர் ஆணைத் தொடர்கள். சம்பிரதாயமான ப்ரோக்ராம் ஆணைத் தொடர்கள் செய்வது டேட்டா என்று சொல்லப்படும் சில தகவல்கள், அல்லது எண்ணிக்கைகளை வைத்துக் கொண்டு கணக்குப் போடுவது. கழித்தல், கூட்டல், சோதித்தல், இப்படி இருந்தால் இப்படிச் செய். இவ்வாறான ஆணைகளைப் பெரும்பாலும் கம்ப்யூட்டர்கள் சம்பிரதாயமாகச் செய்கின்றன. 'எக்ஸ்பர்ட் சிஸ்டம்' என்னும் ஆணைத் தொடர்கள்... 'அறிவை' ஆதாரமாகக் கொண்டு யூகங்கள் செய்ய வல்லவை. **Knowledge, Reasoning** இந்த இரண்டும் அதன் மந்திர வார்த்தைகள்.

எக்ஸ்பர்ட் என்பது ஒரு 'வல்லுனர்' என்று சொல்லலாமா? ஒவ்வொரு துறையிலும் வல்லுனர்கள் உள்ளனர். சினிமா, பாட்டு, மருத்துவம், கணிப்பொறி இயல், என்று... கார்னிஜி மெலன் பல்கலைக் கழகத்தின் ப்ரொபஸர் சைமன் "ஒரு வல்லுனருக்கு ஒரு துறையில் பத்து வருஷமாவது அனுபவம் இருக்கும், சுமார் ஐம்பதாயிரம் விஷயங்கள் அத் துறையில் தெரிந்திருக்கும்" என்கிறார்.

இவ்வகை வல்லுனரின் அறிவுக் கருவூலத்தை கம்ப்யூட்டருக்குள் கொண்டு வருவதுதான் எக்ஸ்பர்ட் சிஸ்டம்.

"அறிவை அளித்து, அதைப் பயன்படுத்தி முடிவெடுக்க உதவுவது" எக்ஸ்பர்ட் சிஸ்டம் என்கிறார் அமெரிக்க டுபாண்ட் கார்ப்பரேஷனைச் சார்ந்த எட் மாலர்.

மாறுதல் என்பது என்ன, புரட்சி என்பது என்ன? படிப்படியாக நிகழ்வது மாறுதல். நாம் அணியும் சட்டைகளில் நாம் பேசும் மொழியில், நம் அரசியலில்... இதில் எல்லாம் நிகழ்வது மாறுதல்.

புரட்சி என்பது ஒரு படி மேலே! தொடர்ந்து நடந்து சென்று கொண்டிருந்தவருக்குக் காரில் செல்வது புரட்சி. காரில் சென்று கொண்டிருந்தவனுக்கு விமானத்தில் செல்வது புரட்சி. விமானக்காரனுக்கு ராக்கெட்!

கம்ப்யூட்டரில் நொண்டிக் கணக்கு போட்டுக் கொண்டிருந்தவனுக்கு எக்ஸ்பர்ட் சிஸ்டம் ஒரு புரட்சி.

இன்றைய தினம் இவ்வகையில் சுமார் மூவாயிரம் எக்ஸ்பர்ட் சிஸ்டம்கள் இருப்பதாக, தினசரி உபயோகப்படுவதாகச் சொல்கிறார்கள். அடுத்த நூற்றாண்டில் இவை லட்சக்கணக்கில் பெருகும்.

சில முக்கியமான பிரயோகங்களைப் பார்ப்போம்.

ஐ.பி.எம். கம்பெனி அமெரிக்காவில் வெர்மாண்ட் என்னும் இடத்தில் சில்லு தயாரிக்கிறது. இவைகளைத் தயாரிக்கும் மிஷின்கள் அனைத்தும் மிக மிக விலை உயர்ந்தவை. ஓர் அரை மணி நின்று போய் உற்பத்தி ஸ்தம்பித்தால் லட்சக்கணக்கில் நஷ்டமாகி விடும். இவ்வகை விலை உயர்ந்த மிஷின்களை திறமையாக வேலை வாங்குவது ஒரு சாகசம். பல வருஷங்கள் அனுபவம் உள்ள விற்பன்னர்கள் தேவைப்பட்டது இந்த வேலைக்கு. இப்போது அவ்வகை விற்பன்னர்களின் அனுபவ அறிவைக் கம்ப்யூட்டருக்குள் சொல்லித் தந்து விட்டார்கள். இப்போது மேனேஜர்களுக்குக் கம்ப்யூட்டர் திரையில் செய்திகள் வருகின்றன. "இதோ பார்ப்பா... ஆறாம் நம்பர் மெஷின் சரியாக இல்லை. அரை மணிக்கு, வேலையை ஏழாம் நம்பருக்கு மாற்றினால் ஜப்பான் ஆர்டரைத் தாக்குப்பிடிக்கலாம். எட்டாம் நம்பருக்கு மாற்றினால் மெக்ஸிக்கோ சப்ளை நிறைவு பெறும். எது உசிதமோ அதைச் செய்!" இப்படி பீஷ்மாச்சாரியார் மாதிரி உபதேசம் செய்யும் ஆணைத் தொடர். இது ஒரு எக்ஸ்பர்ட் சிஸ்டம். வல்லுனர் அமைப்பு! இதனால் ஐ.பி.எம்.முக்கு லாபம் நூறு கோடி டாலர்!

ஜப்பானில் செண்ட்டு, ஒயின் போன்ற மதுபானங்கள் விற்பதற்குக் கூட எக்ஸ்பர்ட் சிஸ்டம் வைத்திருக்கிறார்கள். கானன் கம்பெனி தன் காமெராக்களுக்கு ஜூம் லென்ஸ்களை வடிவமைக்க அதற்கான இயற்பியல் ஞானம் இருபது வருஷ

அனுபவத்தில் கிடைத்ததை ஒரு ப்ரோக்ராமுக்குள் அடக்கி விட்டார்கள்.

அதே போல் விமானக் கம்பெனிகளுக்கு ரூட் அமைப்பது, எஃகு உற்பத்தி, கம்ப்யூட்டர் விற்பனை, கடற்படைப் பயிற்சி, ட்ராக்டர், லாரி வடிவமைப்பு என்று பல்வேறு துறைகளில் இப்போது பயன்படும் இவ்வகை 'அறிஞர் உதவி'கள் அடுத்த நூற்றாண்டில் அதிகமாகும்.

ஒருமுறை வெற்றிகரமாகச் செய்ததைக் கம்ப்யூட்டருக்குள் செலுத்தி விட்டால், வருங்காலத்தில் அந்த வெற்றியைத் திரும்பத் திரும்பப் பெற முடியும். இதுதான் சூட்சுமம். அடுத்த நூற்றாண்டுக்குள் தமிழ் சினிமாவின் வெற்றி ஃபார்முலாவுக்கு ஒரு எக்ஸ்பர்ட் சிஸ்டம் யாராவது கொண்டு வந்து விட்டால் ஆச்சரியமில்லை.

சென்ற ஆறு மாதங்களாகப் பல துறைகளில் வரப் போகும் முன்னேற்றங்களைப் பார்த்தோம். செய்தித் தொடர்பு, மருத்துவம், விண்வெளிப் பயணம் என்று பல விஷயங்களை... அதிகம் தொடர்ச்சியில்லாவிடினும், ஆராய்ந்தோம். ஒரு துறையைப் பற்றி மட்டும் சொல்லாமல் விட்டோம்.

நம் மனிதத் தன்மையில், மானிடத்தில் அடுத்த நூற்றாண்டில் எவ்வகை முன்னேற்றங்கள் நிகழும்? மனிதன் போராடுவதை நிறுத்தி விடுவானா? சின்னச் சின்ன விஷயங்களுக்காக மதத்துக்காக, மதத்தின் உட்பிரிவுகளுக்காக, ஜாதிக்காக, ஜாதிகளின் நுட்பங்களுக்காக, மொழிக்காக, மொழிகளின் கிளை மொழிகளுக்காக... நகரங்களின் தெருக்களில் ரத்தம் சிந்துவதை — துப்பாக்கி சுடுவதை — கண்ணீர்ப்புகை வெடிப்பதை — அடிப்பதை — துடிப்பதை — நடிப்பதை, நிறுத்தி விடுவானா? தன் அழகான குழந்தைகளை நிர்வாணமாகத் தெருவில் உலவ விடுவானா...

ஏழைகளை ஏழைகளாகவே வைத்திருந்து, பணக்காரர்கள் இன்னும் சீர்பெற்று, உலகின் பெட்ரோல் அனைத்தையும் குடித்து, அதன் அலுமினியம், துத்தநாகம், ஈயம் போன்ற அனைத்துப் பொருட்களையும் நூற்றாண்டின் முதல் பகுதியிலேயே காலியாக்கித் தன் கடல்களில் ப்ளாஸ்டிக், எண்ணெய்க் கழிவுப் பொருட்களை நிரப்பிப் பறவைகளையும் மிருகங்களையும் வாழ விடாமல் பண்ணி, பணத்தில் சீர் பெற்று மனத்தில் சீர் அழிந்து, ஓர் அபத்திரமான, சந்தேகத்திற்கு இடமான, குற்ற உணர்வுள்ள சுபிட்சம் பெறப் போகிறானா?

இந்தக் கேள்விக்கு 'இல்லை' என்று பதில் சொல்ல முடியவில்லை.

இந்தத் தொடரைத் தொடர்ந்து படித்து, கடிதம் எழுதி இதைப் பற்றி என்னிடம் நேரிலும் போனிலும் பேசிய அனைவருக்கும் நன்றி.

(முற்றும்)





# மாற்றங்கள்

"தொரைக்கு இன்னும் தூக்கம் கலைல போலிருக்கு. எழுந்திருடா சனியனே!''

சுருண்டு படுத்துக் கொண்டிருந்த அருணுக்கு இந்த அர்ச்சனை காதில் விழவில்லை. அவன் சுகமான தூக்கத்தின் உச்சத்தில் இருந்தான்.

"டேய் தூங்குமூஞ்சித் தரித்திரமே! தூங்கிண்டே இண்டர்வ்யூவில போய் நின்னா எவன்டா வேலை குடுப்பான்? இன்னிக்கு இண்டர்வ்யூ. எத்தனையாவது? செஞ்சுரியா? எழுந்து தொலையேன்டா. உனக்கு எப்பவுமே விடியப் போறது இல்லை.''

அப்பாவின் குரல் வலுத்தபோது, அவன் தூக்கம் கலைந்தது. மெல்லக்கண் விழித்தான். எதிர்ச் சுவரில் இருந்த கடிகாரம் ஆறு என்றது.

கண்களின் மேல் பாரமாய் அழுத்தும் தூக்கம் இறங்க மறுத்தது. இரவு வீடு திரும்பிப் படுக்கும் போது, மணி மூன்றாகிவிடுகிறது. இப்போதெல்லாம் பெரும்பாலும் வீடு திரும்பும் போது விடிகாலை ஆகிவிடுகிறது.

ராமு அடிக்க வேண்டிய ஆராய்ச்சிக் கட்டுரை தான்! ஒரு மெடிக்கல் காலேஜ் மாணவன் அவசரமாய் வந்து கேட்டபோது, அவன் அருணைக் கைகாட்டி விட்டான். தனக்கு 'தீஸிஸ்' டைப் அடிக்கக் கூடிய அளவுக்குப் பொறுமை இல்லை என்று வெளிப்படையாக ஒத்துக் கொண்டதில், அந்த 'ஜாப்' அருணுக்கு வந்து சேர்ந்தது. வருடக் கடைசி ஆகையால் இப்போதெல்லாம் ஆராய்ச்சிக் கட்டுரைகள்தான் அடிக்க வேண்டி வருகிறது. அதுவும் அவசரமாய் அடிக்க வேண்டி இருக்கிறது.

பி.ஏ. முடித்து, டைப்ரைட்டிங் ஹையர் முடித்து, ஐந்து வருடங்கள் முழுதுமாய் ஓடிவிட்டது. டபுள் கிராஜுவேட், போஸ்ட் கிராஜுவேட் என்றெல்லாம் படித்துவிட்டு எதற்கோ இவனுடன் வந்து இண்டர்வியூவில் எல்லோரும் போட்டிக்கு நிற்கிறார்கள்.

மூன்று மாதங்களாக நண்பர்கள் சேர்ந்து ஆரம்பித்திருக்கும் ஜாப் டைப்பிங் சென்டரில் வரும் வருமானத்தினால் அப்பாவிடம் அப்ளிகேஷனுக்குக் கையேந்தி நிற்கும் நிலைமையைத் தவிர்த்தாகிவிட்டது.

"இத்தனை நாழி தூங்கிண்டே கனவு கண்டே, இப்ப கண் முழிச்சுண்டே கனவு காண்றயா?'' அப்பா வாசலில் இருக்கும் பாத்ரூமுக்குச் செல்லும் போது, அவர் கையிலிருந்த பக்கெட்டிலிருந்து தெரிந்தோ தெரியாமலோ அவன் மேல் தண்ணீர் சிந்தியது.

சாதாரண நாட்களிலேயே தூங்க முடியாது. இன்று இண்டர்வ்யூ! தூங்குவதில் நியாயமில்லை என்று தெளிந்து, எழுந்து படுக்கையைச் சுருட்டினான்.

சமையலறையிலிருந்து பின்புறம் கிணற்றடிக்குச் சென்று கொண்டிருந்த அம்மா நின்று அவனைப் பார்த்தாள். விடிகாலையிலேயே எழுந்து குளித்து, புத்துணர்ச்சியோடு இருந்தாள். அவள் கண்களில் அன்பு ததும்பியது.

மெல்ல அருகில் வந்து அவன் தலையில் ஆதரவாய்க் கை வைத்து ''இன்னிக்கு இண்டர்வ்யூவில உனக்கு நிச்சயமா வேலை கிடைக்கப் போறது பரேன்'' என்றாள்.

அருணுக்கு மனசு நிறைந்து, ஒரு நிமிடம் இன்று இண்டர்வ்யூவுக்குச் செல்லும் அந்த வெளிநாட்டுத் தொழில் நிறுவனத்தில் வேலை கிடைத்து விட்டாற் போல உணர்ச்சி ஏற்பட்டது.

''என்ன அங்க கார்த்தாலேயே கொஞ்சல், குழையல்?'' அப்பாவின் குரல் கேட்டு அம்மா மெல்ல நகர்ந்தாள்.

அப்பா ஒரு சர்வாதிகாரி. அம்மாவும் மற்ற எல்லாரும் அவருடைய அடிமைகள். ஆரம்பம் முதலே அம்மா அவரிடம் பணிந்து போய்ப் பழகிவிட்டாள். அவரும் எடுத்ததுக்கெல்லாம் எரிந்து விழுந்து, 'ஓ' வென்று கத்தி, எல்லாரையும் வார்த்தைகளால் மிதிப்பார்.

வேலையில்லாமல் இருப்பது அவன் பலவீனம். பதில் பேசுவதற்கு, தான் திராணியாற்றவன் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும்.

இருந்தும் இதுபோல் முன்பு ஓரிரு சமயங்களில் அம்மாவுக்குத் திட்டு விழும் போது அவன் குறுக்கே வந்து தடுத்து இருக்கிறான்.

''மொதல்ல உனக்கு நீ ஒரு வேலையத் தேடிண்டு அப்புறமா வாயத்திற. நீயே ஒரு தண்டச் சோறு. நீ இன்னொருத்தருக்கு வக்காலத்து வாங்க வந்துட்டயா?'' அப்பாவின் சொற்கள் புல்லட்டுகளாய் அவன் மீது தாக்கியிருக்கின்றன.

விவேகானந்த்

கொஞ்சம் கொஞ்சமாய் அவனும் அவரிடம் பேசுவதை நிறுத்தி மௌனியாகி விட்டான்.

**கி**ணற்றடியில் பல் தேய்த்து முகம் கழுவிக் கொண்டிருக்கையில் "விஷ் யூ பெஸ்ட் ஆஃப் லக், அண்ணா" என்ற குரல் கேட்டு நிமிர்ந்தான் அருண்.

தம்பி பாலு ஸ்கூல் பையுடன் நின்று கொண்டிருந்தான்.

"இன்னிக்கு நிச்சயமா உனக்கு வேலை கெடச்சுடும்னு என் மனசுக்குப் படுது அண்ணா" என்றபடி அருணின் கையைப் பற்றிக் குலுக்கினான்.

"ரொம்ப தேங்க்ஸ்டா பாலு," என்று சொன்னபோது அவன் மனத்துக்கு ஆறுத லாக இருந்தது.

பாலு ப்ள்ஸ்டூ படிக்கிறான். இன்னும் ஒரு மாதத்தில் தேர்வு! படிப்பு ரொம்பவும் சுமார்தான். ஆனாலும் அருண் வார்த்தை களால் காயப்பட்டுத் தோல்விகளைச் சந்திக்கும்போதெல்லாம் துவண்டு விடாமல் தூக்கி நிறுத்தப் படுவது பாலுவின் வார்த் தைகளால்தான்.

அப்பாவை நினைக்கும் போதே வாழ்க் கையில் ஒருபுறம் வெறுப்பு. இண்டர்வ்யூ வுக்குக் கிளம்ப அம்மாவிடம் போய்ச் சொன்னபோது, சாமி அறையிலிருந்து விபூதி எடுத்து நெற்றியில் கீற்றாய் இட்டான்.

**எ**ல்லா இண்டர்வ்யூக்களையும் போலக் கண் துடைப்புக்காக நடத்தப்படா மல், கேள்விகள் உண்மையாக இருந்த போது அவனுக்கு நம்பிக்கை அதிகரித்தது. இவன் டைப் அடித்த வேகமும், நேர்த்தியும் பார்த்த போது, அதிகாரி இவன் முகத்துக் கெதிரிலேயே வியந்தார். ஒரு தட்டெழுத்து இயந்திர உற்பத்தி நிறுவனம் நடத்திய போட்டியில் அகில இந்தியாவில் முதலாவ தாக வந்த சான்றிதழ் அருணின் தேர்வுக்கு உதவியது.

அவன் ஒருவன் மட்டுமே வேலைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் செய்தி, அன்று மாலை தெரிவிக்கப்பட்ட போது, சந்தோ ஷத்தில் திக்குமுக்காடினான். டைப்பிஸ் டாக இருந்தாலும் ஆரம்பச் சம்பளமே இருபத்தைந்து வருடமாக அரசு ஊழியராய் இருந்து வரும் அவன் அப்பாவுக்கு இணை யாக இருந்தது.

"**அ**ம்மா நீங்க சொன்ன மாதிரியே எனக்கு வேலை கெடைச்சிடுத்தும்மா. எல்லாத்துக்கும் உங்க ஆசீர்வாதம்தாம்மா காரணம்," என்று சொல்லி சம்பளத்தை யும் சொன்ன போது, அம்மா அவனை



ஆரத்தழுவி உச்சியில் முத்தமிட்டாள்.

உணர்ச்சிவசப்பட்டு அவள் கால்களில் விழுந்து நமஸ்கரித்தவனை எழுப்பி நிறுத்தி, உள்ளே டப்பாவிலிருந்து சக்கரையை ஒரு பிடி அள்ளி அவனுக்கு ஊட்டி விட்டுத் தானும் வாயில் போட்டுக் கொண்டு சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டாள்.

பாலுவிடம் சொன்ன போது, கைகளை அழுந்தப் பற்றிக் குலுக்கி வாழ்த்துத் தெரிவித்தான்.

''அப்பாகிட்டேயும் ஒரு வார்த்தை சொல்லிடேன்,'' என்றாள் அம்மா.

ஹாலில் இருந்த அப்பாவிடம் போய் விஷயத்தைச் சொன்னான்.

சம்பளத்தைக் கேட்ட போது அவர் முகம் பிரகாசமானது. ''எனக்குத் தெரியும். இன்னிக்கு இண்டர்வ்யூல நிச்சயமா வேலை கெடச்சிடும்னு. வெரிகுட்! ரொம்ப டயர்டாயிருப்பே. போய் ரெஸ்ட் எடுத்துக்கோ!''

அப்பாவின் மாற்றம் அருணுக்கு அதிர்ச்சியாயிருந்தது.

அருணுக்கு உடல் அசதியாய் இருந்தது. மணி ஏழாகியும் எழுந்திருக்க முடியாமல் சுருண்டு போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு தூங்க ஆரம்பித்தான்.

''எட்டு மணி ஆகிக் கூட தொரைக்குத் தூக்கம் கலையலே போலிருக்கு. எழுந்திருடா சனியனே!''

அப்பாவின் கத்தல் கேட்ட அருணுக்கு ஒரு நிமிடம் பழைய நினைவுகள் கனவாய் வருகிறதா என்ற பிரமையில் குழம்பியபடி மறுபடி தூங்க முயன்றான்.

''தூங்கு மூஞ்சித் தரித்திரமே. உனக்கு எப்பத்தான் விடியப் போறது? எவ்வளவு படிச்சும் உன் மரமண்டையில ஏறாம ஏளஸ்டு 'கோட்' அடிச்சாச்சு. பாஸ் பண்ணி ஒரு வேலையைத் தேடிப்பியான்னு பார்த்தா அதுக்கும் துப்பு இல்லே. இந்த லட்சணத்துல பாக்கெட் மணி வேற கேக்கற?''

அருணுக்குத் தூக்கம் மட்டுமல்ல, மனமும் தெளிந்து விட்டது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

பாலுவின் அருகில் நின்று அவனை எழுப்பிக் கொண்டிருந்தார் அப்பா.

அருண் எழுந்திருப்பதைப் பார்த்தவுடன், ''நீ தூங்கு-பாவம்! ஆபீஸ்ல இப்பல்லாம் வேலை அதிகமாப் போச்சுன்னு அம்மாகிட்டே நீ நேத்திக்குச் சொல்லிண்டிருந்தது என் காதுல விழுந்தது,'' என்று அப்பா சொன்னதைக் கேட்ட போது, அருணுக்கு வேடிக்கையாக இருந்தது.

இனிமேலும் மௌனமாய் இருக்கக் கூடாது என்று நொடியில் முடிவு செய்தான்.

''அப்பா தயவுசெஞ்சு மேலே பேசாதீங்கப்பா. வாழ்க்கையில அடிபட்டு நொந்து போயிருக்கும் போது ஆதரவாய்ப் பேசி ரணத்துக்கு மருந்து போட முடியல்லேன்னாலும் கீழே விழுந்து கிடக்கறவனை மேலே மேலே வார்த்தையால மிதிச்சு இன்னும் படுகுழியில தள்ளாம இருங்க. அது போதும். நீங்க எனக்கு அப்பாவாயிட்டதுனால இதுக்கும் மேலே அதிகமாப் பேசறதுக்கு நான் விரும்பல.''

அருணின் வார்த்தைகள் காதில் விழுந்த போது, அப்பா திக்பிரமை பிடித்தாற் போல நின்றார். பதில் பேசுவதற்கு வாய் திறக்க மறுத்து, உதடுகள் ஒட்டிக் கொண்டு உலர்ந்து போயின. முகம் ஒரு மாதிரி கறுத்து இறுகிப் போனது.

அப்பாவுக்குள்ளும் ஒரு மாற்றம் ஏற்பட்டு விட்டதென்று அருண் புரிந்து கொண்டான்.

கிணற்றடியில் பாலுவை ஏதோ சொல்லி அம்மா தேற்றிக் கொண்டிருந்தாள்.

''பாலு, இந்த மாசத்துலேர்ந்து உனக்கு பாக்கெட் மணி நூறு ரூபாய் தரேன். மனசை மட்டும் தளர விட்டுடாதே!'' என்று சொன்ன போது, பாலு உணர்ச்சியை அடக்க முடியாமல் அருணின் தோளில் சாய்ந்து கொண்டு குழந்தையைப் போல் அழ ஆரம்பித்தான்.

# கல்யாணத்திலே நடந்தது!



தை பிறந்து கல்யாண சீசனும் ஆரம்பமாகி விட்டது. உங்கள் குடும்பத்தில் நடந்த திருமணங்களின் ஞாபகம் வரும்; சுவாரஸ்யமான நிகழ்ச்சிகளும் நினைவிலே மோதும். அவற்றுள் ஒன்றைக் ''கல்யாணத்திலே நடந்தது!'' என்று தலைப்புத் தந்து தபால் கார்டில் எழுதி அனுப்புங்களேன். பிரசுரமானால் பரிசு ரூ. 25/–

முடிவு தேதி: ஜனவரி 31

ஸ்ரீ வெங்கடேஸ்வரா துணை!

## அனைவருக்கும் 'சீனு'வின் பொங்கல் நல்வாழ்த்துக்கள்!



# குருவிக்கு கூட உள்ளது சொந்த கூடு. உங்களுக்கு உள்ளதா சொந்த வீடு?

உடனடியாக வீடு கட்டி குடியேறத்தக்க வீட்டு மனைகள் விற்பனை.

# திருவள்ளூர்

ரயில் நிலையம் மற்றும் இந்துஸ்தான் மோட்டார்ஸ் அருகில் மனைப் பிரிவுகள் அமைந்துள்ளன.

D.T.P. அங்கீகார எண்: 331/89, 213/89

ஒரு மனை விலை

**ரூ.8000 முதல் ரூ.11000 வரை**

உடனடியாக முழுத்தொகை செலுத்துபவர்களுக்கு 10% சிறப்புத் தள்ளுபடி உண்டு. 31-1-90க்குள் முழுத்தொகை செலுத்துபவர்களுக்கு ஒரு பெரிய சைஸ் எவர்சில்வர் டிரம் அன்பளிப்பாக தரப்படும்.

**கலப தவணையில் வாங்க: அட்வான்ஸ் ரூ.3000/- மீதியை கலப மாதத் தவணையில் செலுத்தலாம்.**

புத்தாண்டு பரிசு:-

மனை வாங்கும் அனைவருக்கும் ஒரு பெரிய சைஸ் எவர்சில்வர் டிரம் பரிசாக கிடைக்கும்!



மனைகளை பார்வையிட ஞாயிற்றுக்கிழமைகளில் காலை 10-00 மணிக்கு எமது அலுவலகத்தில் இருந்து இலவசமாக அழைத்துச் செல்கிறோம்.




# சீனு ரியல் எஸ்டேட்ஸ்

"சுகந்தி மேன்சன்"

No. 6, ரங்கநாதன் தெரு. (முதல் மாடி)

சென்னை-600 017. போன்: 447820

13

# வல்லமை தாராயோ?!

**கோ**பி அண்ணா சாலையில் வந்து கொண்டிருந்தான், ஸ்கூட்டரில். நியான் விளம்பர சாகஸங்கள் கட்டடங்களின் விலாவில். இருட்டைத் துளை போடும் ஆயிரம் வெளிச்சக் கத்திகள் ஏந்திய வாகனங்கள் சாலையில். காற்றில் மழைக்கான முன்குறிப்பு இருந்தது.

கோபி சிக்னலில் நின்ற போது, நேரம் பார்த்தான்.

குப்தாவின் கடை மூடும் நேரம். வந்தனாவை பிக்கப் செய்து கொண்டு போகலாம். பச்சை வர, புறப்பட்டான்.

இந்த எண்ணம் வந்ததும் வண்டியின் வேகத்தைக் குறைத்து, அந்த காம்ப்ளெக்ஸ் வாசலில் பார்க்கிங் பகுதியில் நிறுத்தி விட்டு நடந்தான். டம, டமவென்று ஷட்டர்களை அங்கங்கே இறக்கிக் கொண்டிருந்தார்கள். பிளாட்பார வியாபாரிகள் பெரிய பாலிதீன் சாக்குகளில் பொருள்களை அள்ளிப் போட்டு, பெட்ரோமாக்ஸின் காற்றைப் பிடுங்கி விட்டுக் கொண்டிருந்தார்கள்.

கோபி படிகள் ஏறி குப்தாவின் கடையை சமீபித்த போது, குப்தா வெளியே நின்று கக்கத்தில் ஓர் உப்பின லெதர் பாக்குடனும், விரலில் சுழலும் கார்ச் சாவியுடனும், சிகரெட் பிடித்துக் கொண்டிருக்க, கடையின் நான்கு ஷட்டர்களில் மூன்றைப் பூட்டி, நான்காவதை இழுத்து விட்டுக் கொண்டிருந்தார்கள் இரண்டு ஊழியர்கள்.

"கோபி சார், வாங்க," என்றான் குப்தா. "சிகரெட் பட்தாரா?"

"வேணாம். வந்தனா எங்கே? வீட்டுக்குப் போயாச்சா?"

"வீட்டுக்குக்காதண்டி. பழையமுதலாளி... வாடு பேரு ஏமி?"

"அரவிந்த்."

"ஆ! அரவிந்து! ஆ அரவிந்த் போன் செஞ்சாரு. வந்தனா பதற்றமா என்னமோ பேசிச்சு..அவசரமாப்போகணும்னுகாரணம் எதுவும் செப்பகண்டா புறப்பட்டுப் போச்சு. இன்னும் வீட்டுக்கு வரல்லையா?"

"நான் வீட்லேர்ந்து வரலை. அவ வீட்டுக்கு வந்திருக்கலாம். வந்தனா இங்கேர்ந்து புறப்பட்டுப் போனது எப்போ?"

"ஒரு மணி நேரமிருக்கும்."

ஊழியர்கள் கடைசி ஷட்டரையும் பூட்டி, சாவிக் கொத்தை குப்தாவிடம் கொடுத்ததும், குப்தா குனிய முடியாமல் குனிந்து, எட்டுப் பூட்டுக்களையும் இழுத்துப் பார்த்து விட்டுக் கோபியிடம் திரும்பினான்.

"ஏமி குழப்பம்?"

"ஒண்ணுமில்லை. வீட்டுக்குப் போனாத் தெரியும். வந்திருப்பா. நான் வர்றேன் சார்."

கோபி நல்ல இரவுக்கு வாழ்த்தி விட்டு நடந்தான். வண்டியை எடுத்துக் கொண்டு, தன் வீட்டிற்கு வரும் வழியிலேயே கொஞ்ச தூரம் இருக்கும்போது வெட்டி வெட்டி நின்று போனது. இறங்கிச் சோதித்தான். பெட்ரோல் இருந்தது. நாற்பது தடவை உதைத்தும் ஸ்டார்ட் ஆகாமல், இவன் பொறுமைதீர்ந்துபோய்வண்டியைத்தள்ளிக் கொண்டே வந்து நிறுத்தி விட்டு, மாடிக்கு, தன் போர்ஷனுக்குக் களைப்போடு வந்தான்.

எதிர்ப்பட்ட சூர்யாவிடம் கேட்டான், "வந்தனா வந்துட்டாளா?"

"இன்னும் வரலைண்ணா. வர்ற நேரம் தான்."

கோபிக்கு உள்ளே லேசாகக் கலவரமாகியது.

அரவிந்த் மேல் கோபப்பட்டு வேலையை ராஜினாமாச் செய்து விட்டு, தன் பழைய வேலையை ஏற்றுக் கொண்டு விட்டாள் இவள். இப்போது அரவிந்த் எதற்காகப் போன் செய்து அழைக்க வேண்டும்? அதுவும் இரவு நேரத்தில். அப்படியே அவன் அழைத்தாலும், அவன் மேல் வெறுப்பாக உள்ள இவள் எதற்காகப் போக வேண்டும்? அதுவும் பதற்றமாக.

"சூர்யா, அக்கா வேலை பார்த்தாளே, அந்தக் கம்பெனி முதலாளி அரவிந்த் போன் நம்பர் உனக்குத் தெரியுமா?"

"அந்த ஆபீஸ் நம்பர்தான் காலண்டர்ல எழுதி வெச்சாங்க — அவசரம்னாக் கூப்புடறதுக்கு."

"அந்த நம்பரை ஒரு காகிதத்தில குறிச்சுக்கிட்டு வா, சீக்கிரம்."

"ஏன், என்ன விஷயம்?"

"சொன்னதைச் செய்யேன்."

சூர்யா குறித்துக் கொண்டு வந்த காகிதத்துடன் கோபி அவசரமாகப் புறப்பட்டு, மூன்றாவது வீட்டில் நுழைந்து, அனுமதி பெற்று போன் செய்தான். பெல் அடித்துக் கொண்டேயிருந்தது. எடுக்க ஆளில்லை. அலுவலகம் எப்போதோ மூடியிருப்பார்கள்.

அரவிந்தின் வீடு தெரியும். நன்றி சொல்ல நேரில் சென்றேன் வந்தனாவுடன். நேரில் சென்று பார்த்து விட்டால் என்ன?

தன் ஊழியை தன்னை அலட்சியப் படுத்தி வேலையை ராஜினாமா செய்து விட்

பட்டுக்கோட்டை பிரபாகர்

டாளே என்கிற அவமானத்தில், ஆத்திரத்தில் இருப்பவன் அவன். அப்படிப்பட்டவன் போன் செய்வதும் — இவள் பதற்றமாகப் புறப்பட்டுப் போவதும்... கவலையைத் தருகிறதே.

கோபி மறுபடி வீட்டுக்குக்கூடச் செல்லாமல் பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்துக் கொண்டு பணம் இருப்பதை உறுதி செய்து கொண்டதும் ஒரு ஆட்டோ பிடித்தான். அரவிந்த் வீட்டிற்குச் செல்லத் தீர்மானித்து ஏரியா சொன்னான்.

குடி போதையின் முழு ஆக்ரமிப்பில் இருந்த, கண்கள் எல்லாம் சிவந்த அரவிந்த் மூர்க்கத்தனத்துடன் தாவி வந்தனாவைச் சேர்த்தணைத்ததும்... நெருப்புத் தீண்டியவளாக உணர்ந்து பதறினாள் வந்தனா.

"நோ! யூ... ராஸ்கல்" என்று அறைந்தாள்.

வலி உறைக்கவே உறைக்காத அரவிந்த், அவள் இடுப்பில் கோத்திருந்த தனது கைகளைக் கொஞ்சம் கூடத் தளர்த்திக் கொள்ளாமல் வார்த்தைகள் இடற, தவளை தவளையாகப் பேசினான். "பயப்படாத டார்லிங்! நான் ஒண்ணும் செய்ய மாட்டேன். நீ என் டார்லிங், நீ என் லவ், நீ என் ஏஞ்சல். நீ என்... அதென்னது... வாழ்க்கைத் துணைவி. உன்னை ஒண்ணும் செய்ய மாட்டேன். சொல்லு, ஐ லவ் யூன்னு சொல்லு, ப்ளீஸ், சொல்லு. உன் ஸ்வீட் உதட்டால சொல்லு. சொல்லும்மா என் ராணி, நீ என்னை விரும்புறேதானே? உனக்கு என் மேல கோபமே இல்லைதானே? சுமான் யார், சொல்லு, சொல்லிடு."

வந்தனாவுக்குக் கோபம் விர்ரென்று மண்டையில் ஏறியது. இப்படி ஒரு மோசமான சூழ்நிலையை அவள் கண்டிப்பாக எதிர்பார்க்கவில்லை. அரவிந்தை இப்படி ஒரு நிலையில் சந்தித்ததுமில்லை.

வந்தனா தன் பலமனைத்தையும் திரட்டி இரண்டு கைகளாலும் அவன் தோள்களைப் பற்றித் தம் கட்டித் தள்ளினாள். அரவிந்தின் பிடி தளர்ந்து, பின்புறமாகச் சாய்ந்ததும், நழுவிய சேலைத் தலைப்பை அள்ளிப் போட்டுக் கொண்டு, வாசல் நோக்கி ஓடினவள் திகைத்தாள்.

கதவு சுத்தமாகச் சாத்தப்பட்டு, பூட்டப்பட்டிருந்தது.

திரும்பிப் பார்க்க, அரவிந்த் எழுந்து கொண்டு இரண்டு கைகளையும் பறவையின் இறக்கைகள் போல அவளை நோக்கி விரித்துக் கொண்டு, குழந்தையை அழைப்பவன் போலக் கெஞ்சலான குரலில்," போகலாம் வந்தனா, உடனே போய்டலாம். சொல்லிட்டுப் போய்டு வந்தனா. ப்ளீஸ்...



என்னை வெறுக்காதே. யார் என்னை வெறுத்தாலும் என்னால தாங்க முடியாது. குறிப்பா நீ என்னை வெறுக்கவே கூடாது. வந்தனா, என்னைப் புரிஞ்சுக்கோ. ஐ லவ் யு லைக் எனிதிங். உன் கோபம் எனக்குப் பிடிக்குது. உன் தன்மானம் எனக்குப் பிடிக்குது. என்னை உனக்கு ஏன் பிடிக்கலை? வொய் நாட் யு லவ் மீ?'' என்று கேட்டுக் கொண்டே அருகில் வந்தான்.

''நோ! அரவிந்த். நீங்க ஜெண்டில்மேனா இருந்தா முதல்ல என்னைப் போக விடுங்க. இப்படி வரவழைச்சிக் கதவைச் சாத்திட்டு, வலுக்கட்டாயமா என் சம்மதம் கேக்கறது நியாயம் இல்லை. நல்ல மூட்ல கேட்டாலும் சரி, தண்ணி போட்டுட்டுக் கேட்டாலும் சரி.. நான் உங்களை நேசிக்கலை, போதுமா? கதவைத் திறந்து விடுங்க.''

''அதான் ஏன் என்னை நேசிக்கலை? நான் என்ன தப்புச் செஞ்சேன்?''

''அதெல்லாம் என்னால விளக்கம் சொல்லிட்டிருக்க முடியாது. எனக்கு உங்க அணுகுமுறை பிடிக்கலை. எனக்கு எல்லா ஆம்பளைங்களையும் பிடிக்காது. எனக்கு காதல்ல நம்பிக்கை இல்லை. காரணம் சொல்லியாச்சு. போதுமா? கதவைத் திறந்து விடுங்க.''

அரவிந்த் அவள் அருகில் வந்தவன் கைகளைக் கட்டிக் கொண்டான். அவள் முகத்தையே பார்த்தான். திடீரென்று சர்ச்சில் பிரார்த்திப்பவனைப் போல மண்டியிட்டு அவளின் கையைப் பிடித்துக் கொண்டான்.

''வந்தனா, இப்பக்கூட எனக்கு உன் மேல கோபமே வரலை. ப்ளீஸ்... என்னை நேசி. உன்மேல் நான் வச்சிருக்கிற அன்பை நான் எப்படி ப்ரூவ் செய்யணும்னு சொல்லு. செய்யறேன். நான் சொல்ற எதுவும் விளையாட்டில்லை. சீரியஸ். நூறு சதவிகிதம் சீரியஸ்.''

''கையை விடுங்க அரவிந்த்.''

திமிறிக் கொண்டு உதறினாள் வந்தனா.

அப்புறம் அவள் கைகளை விடாமல் கெஞ்சலைத் தொடர்ந்த அரவிந்த், திடீரென்று எழுந்தான். தன் இரையைப் பார்க்கிற ஒரு புலியின் பார்வை அவன் கண்களில் படர்ந்தது.

சட்டென்று அவள் கன்னத்தில் பலமாக அறைந்தான்.

''சொல்லு. என்னை லவ் பண்றேன்னு சொல்லு. என்னைப் பிடிக்கலைன்னு நீ சொல்லவே கூடாது. முடியாது; அதை என்னால தாங்க முடியாது. சொல்லிடு வந்தனா. என்னை வெறியேத்தாதே. நீ சொல்ற வரைக்கும் உன்னை விடப்போறதே இல்லை. என்ன நடந்தாலும் சரி.''

வந்தனா வாங்கின அறையில் பொறி கலங்கி நின்றாள். ஹிஸ்டீரியா நோயாளியைப் போல, வெறியோடு தான் சொன்னதிலேயே பிடிவாதமாக நிற்கும் அரவிந்தைப் பார்க்கும் போது, இத்தனை நேரம் இருந்த கோபத்தைத் தாண்டி, லேசான பயம் ஏற்பட்டது.

நல்ல போதையில் இருக்கும் இவன் எதையும் காதையும், மனத்தையும் கொடுத்துக் கேட்கும் சூழ்நிலையில் இல்லை. இரவு நேரம். சாத்தப்பட்டுள்ள தனியறை. என்ன செய்யப் போகிறான்? நான் என்ன செய்யப் போகிறேன்?

அரவிந்த் இப்போது மீண்டும் அவள் மேல் தாவி இறுக்கமாக அணைத்துக் கொண்டு, ''ஐ லவ் யு ஹனி'' என்றவன் முரட்டுத்தனமாகத் தன் உதடுகளை வந்தனாவின் உதடுகளில் பதித்தான். வந்தனாவின் தள்ளல், நகப் பிறாண்டல் எதுவும் அவனைப் பாதிக்கவே இல்லை. வெறித்தனமாக முத்திரை பதிக்க, வந்தனா பெரிய கூச்சலிட்டுத் திமிற... பற்கள் பட்டு அவளின் உதடு கிழிந்து ரத்தம் வந்தது.

அவளை அணைப்பிலிருந்து அப்போதும் விடுவிக்காத அரவிந்த், ''சொல்லிடு. ஐ லவ் யூன்னு மனசாரச் சொல்லிடு,'' என்று கீறல் விழுந்த ரெக்கார்டு போலச் சொல்லிக் கொண்டே சேலையின் தலைப்பைப் பிடித்து இழுத்து விலக்கினான்.

கீழே ஹாலில் தன் சிகரெட்டை சுவாரசியமாக அனுபவித்துக் கொண்டிருந்த கிருஷ்ணன் மேலிருந்து வரும் சப்தங்களுக்கு மெல்லச் சிரித்துக் கொண்டான். எழுந்து மெதுவாக நடந்தவன், வாசலில் ஒரு கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டு, அவசரமாக வாசல் கதவைத் திறந்து பார்த்தான்.

டாக்ஸியில் இருந்து இறங்கின கோபி டாக்ஸியைக் காத்திருக்கச் சொல்லி விட்டு நிமிர்ந்து, ''சார், வந்தனா இங்கேயா இருக்கா?'' என்றான்.

(தொடரும்)

---



''நான் இன்னும் பில்லே தரலை. அதுக்கு முன்னாடியே எனக்கு ஏன் டிப்ஸ் தரீங்க சார்?''

''என் ஃபிரண்ட் கைகழுவிட்டு வந்ததும் பில்லைநீ அவன்கிட்டேதான் கொடுக்கணும். அதுக்குத்தான் இந்த டிப்ஸ்!''

— ஞா. ஞானமுத்து.

உணவுகள் பல வகை. அதில் சுவை கூட்டி சுகம் பெற
ஒரே சுவை நாபெட் இன்சுவை ரகங்கள்.

nafed
"சுவை மன்னர்கள்"




**NAFED PROCESSED FOODS**

"Cresent Court "2nd Floor, 963, Poonamallee High Road,
Madras-600 084. Phone: 665851. Telex: MS-7472.

# உங்கள் முன்னேற்றத்திற்குத் துணை புரிபவர் இவர்தான்!...



உங்கள் முன்னேற்றத்திற்குத் துணை புரிபவர் இவர்தான் என்று தபால்காரரை நாங்கள் சுட்டிக்காட்டினால் அது வியப்பாகத் தோன்றும். ஆனால் உண்மை நிலை அதுதான்.

உங்கள் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு ஆங்கிலமொழி தடையாக இருக்குமேயானால், கீழ்க்காணும் நிலைகளில் நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள் என்பதை சிந்தித்துப் பாருங்கள்...........

★ தமிழ் எழுத, வாசிக்கத் தெரிகிறது. ஆனால் ஆங்கிலத்தில் ஒரு வார்த்தை கூட வாசிக்க முடியவில்லை. இதுதான் உங்கள் நிலையா?—அல்லது,

★ பிறர் ஆங்கிலத்தில் பேசுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவர்களிடம் ஆங்கிலத்தில் பதிலளிக்க முடியவில்லையே என வருந்தும் நிலையா? — அல்லது,

★ பட்டம் பெற்றிருந்தும், ஆங்கிலத்தில் பேசினால் இலக்கணத் தவறு ஏற்பட்டு விடுமோ எனத் தயங்கி நிற்கும் நிலையா?

இனி, கவலை வேண்டாம்.

சுருக்கமாகச் சொல்வதென்றால், ஆங்கிலத்தில் சரளமாகப் பேச வேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதம் எழுத வேண்டும் என்ற உங்கள் விருப்பத்தை, ஒரு போஸ்ட் கார்டில் எழுதி 'ஆசியன் இன்ஸ்டிட்யூட்' நிறுவனத்திற்கு இன்றே அனுப்புங்கள்.

எளிய தமிழில் தபால் மூலம் அளிக்கப்படும் இப்பயிற்சி பற்றிய விபரங்களும், வீட்டிலிருந்தவாறே இப்பயிற்சியில் சேர்ந்து பயன்பெறுவது எவ்வாறென்பது போன்ற விபரங்களும் அடங்கிய ஓர் தகவல் புத்தகத்தை இரண்டொரு நாட்களில் தபால்காரர் உங்களிடம் அளிப்பார்.

போஸ்ட் கார்டில் எழுத வேண்டிய முகவரி:

**ஆசியன் இன்ஸ்டிட்யூட்**
**பொன்மேனி (P.O.) மதுரை-10**

* ஈழத்தமிழர்கள்பிரச்னையைக் கவனத்துடன் அணுகத் தமிழக முதல்வருக்கும், பாரதப் பிரதமருக் கும் தலையங்கத்தின் மூலம் கவலை உணர்வோடு எச்சரித்து, வாழப் பாடி கூறியதையும் மேற்கோள் காட்டிய கல்கியின் பாரபட்சமற்ற பாணி பாராட்டுதலுக்குரியது.

வேலூர். கே.ஆர். தேவேந்திரன்.

* 'வாழப்பாடியின் எச்சரிக்கை' தலையங்கம் சிறப்பாக அமைந் திருந்தது. விடுதலைப் புலிகள் விவகாரத்தில் ஒவ்வொரு நிலை யிலும் 'கல்கி'யின் கணிப்பு மிகச் சரியாகவே இருந்து வந்துள்ளது.




# குழப்பத்திற்கு மருந்து

தலையங்கம் சாதாரண வாசகர் களால் மட்டுமின்றி முதல்வரா லும், பிரதமராலும் கூடப் படிக்கப் பட வேண்டிய ஒன்று.

திருவை, கே. இராமநாதன்.

* 'வெற்றிகரமான மண வாழ்க் கை' படித்தேன். பெரும்பாலும் நமது நாட்டில் அதிலும் குறிப்பாக தமிழகத்தில் கணவன் — மனைவி உறவு முறையில் சின்னச் சின்னக் காரணங்களுக்குக் கூட ஒருவரை யொருவர் புரிந்துக் கொள்ளாமல் சிக்கல் ஏற்படுகிறது. இதற்குத் தங்கள் கட்டுரை விடையாகவும் பயனுள்ள வகையிலும் அமைந் துள்ளது. ஒவ்வொரு குடும்பத் திலும் ஏற்படும் குழப்பத்திற்கு இந்தக் கட்டுரை நிச்சயமாக மருந் தாகப் பயன் படும்.

சென்னை, எஸ். சங்கர நாராயணன்.

* ஒவ்வொரு ஆடவனும், பெண் ணும் மண வாழ்க்கையில் மணம் வீசத்தக்க முறையில் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை அழகாக விளக்கி யுள்ளது.

திருவண்ணாமலை — 1 ஆர். அருணாசலம்.

* 'கிளாஸ்னாஸ்ட்' எனப்படும் பகிரங்கத் தன்மையால் தான் கிழக்கு ஐரோப்பா விடிவு கண்டு கொண்டு இருக்கிறது. எம். ஏ. வெள்ளோடி அவர்களின் விளக் கத்தால் கார்பசேவ் நவீன புதுயுக மலர்ச்சியின் தந்தை என்பதை உளப்பூர்வமாக உணர முடிந்தது.

குருவரெட்டியூர். நந்திவர்மன்.

* ஓய்வு பெற்ற அதிகாரிகள் கூறும் உருப்படியான யோசனை களை அரசு ஏற்றுச் செயல் பட்டால் சென்னை மட்டுமென்ன; தமிழ் நாடே சுபிட்சம் பெறும்.

கம்பம், எம். சாஜகான்.

* உலக அளவிலான செய்தி களைக் குறிப்பிடுவது கின்னஸ்; இந்திய அளவிலான செய்தி களைக் குறிப்பிடுவது, லிம்கா புக் ஆப் ரிகார்ட்! இவை அனைத் திலிருந்தும் செய்திகளைத் தொகுத்து வழங்குவது கல்கி!

தக்கோலம், அ. முஸ்தபா.

* இளமையிலேயே சின்னா பின்னப் பட்டுப் போன சின்னா வின் கதை, மனத்தை வருத்தியது. சமூக விரோதிகள் உருவாவ தில்லை; உருவாக்கப் படுகிறார் கள்! இளவயதில் கட்டாயக் கல்வி முறையைப் புகுத்தி, பள்ளிக்குச் செல்லாமல் இருந்தால், தண்டனை எனும் நிலையை அமல் படுத்தி னால் நிலைமை ஓரளவு சீராகும்!

இராமநாதபுரம், எஸ். லதா.

* 'மார்கழி மயக்கம்' சிறுகதை பஜனையின் புனிதம் சகோதரத் துவம், சமத்துவத்தை வெளிப் படுத்தியது. பலரின் போலி வறட்டு அகந்தையையும் அப்புறப்படுத் தியது.

ஈரோடு, டி. சந்திரன்.

* தெய்வ நம்பிக்கை என்பது, ஏதாவது ஒரு வடிவத்தில் எல்லோ ரிடமும் இருந்தே தீருகிறது. இறை வனின் படைப்பில் காரணம் இல்லாத காரியம் ஏதுமில்லை, அனைத்து உயிர்களின் இயக்கத் திற்கும் அவனே மூல காரணம் என்னும் கருத்தை மையமாகக் கொண்டு சிறுகதை விருந்து படைத்த ஜனனிக்கு எனது மன மார்ந்த பாராட்டுகள்.

தக்கோலம், ஆ. புகாரி.

* உலகில் 'தாய்ப் பாலுக்கு மட்டும் விலையே இல்லை!' என் பார்கள். அதுபோல், பிரசவ வேதனை என்பதும் பெற்ற தாய்க்கு மட்டுமே தெரியும்! இதை யொத்த, "இந்த அவஸ்தைக்கும் அதன்பின் ஏற்பட்ட மன நிறை வுக்கும் விலை நிர்ணயிக்க நேர் வதைப் போன்ற துர்ப்பாக்யம் வேறு ஏதுமில்லை" — 'செட்டிங்' இல்லாத நிதர்சனமான தரணி யின் வார்த்தைகள் ஒரு கலைஞ னுக்கு மட்டுமே புரியும்!

கும்பகோணம் — 1, கே. மதுர கீதா.

* இந்த வாரக் கல்கியில் வெளி யான மூன்றாவது கார்ட்டூனைக் கலைஞருக்கு அனுப்பி வைக்க வேண்டும். உண்மையான கழக உடன் பிறப்புகளின், உள்ளக் குமுறல்களை, அப்படியே வெளிக் கொணர்ந்து, சித்திரிக்கப் பட்டுள்ளது. இதைப் பார்த்தாவது, கலைஞர் சிந்தித்து, தி.மு.க. தொண் டர்களின் மனத்தை மதித்துச் செயல்படுவாரா?

இராணிப்பேட்டை, பேப்பர் கார்த்திக்.

* மத்திய அமைச்சர் முரசொலி மாறன் 'எங்கள் தங்கம்' படத்தை இயக்கியவர் என்று குறிப்பிடப் பட்டு இருந்தது. அது தவறு. 'எங்கள் தங்கம்' படத்தை டைரக்டு செய்தவர்கள் இரட்டை இயக் குனர்களான கிருஷ்ணன் — பஞ்சு.

அய்யன்கோட்டை, ஏ.எஸ். முத்து.

* 'சாஸ்தா கல்யாணம்' என்ற கட்டுரை சிறப்பாக இருந்தது. எனினும், அந்த நிகழ்ச்சி வில்லி வாக்கம் அய்யப்ப பஜனை சங்கத் தால் நடத்தப்பட்டது என்று தாங் கள் குறிப்பிட்டுள்ளது சரியல்ல. வில்லிவாக்கம், அகஸ்தியர் நகர், தர்ம சாஸ்தா சமாஜத்தைச் சேர்ந்த நாங்கள்தான் திரு. விசுவ நாத சர்மாவைக் கொண்டு அன்றைய தினம் கல்யாண உத்ஸ வம் நடத்தினோம். நிகழ்ச்சிக்கான பொருள் செலவும் உழைப்பும் எங்களுடையதே என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறோம்.

சென்னை — 49, தர்ம சாஸ்தா சமாஜ உறுப்பினர்கள்.

# ஸ்ரீகாந்தின் காஸ்ட் மூவி பறிபோய் விட்டதே?

* எம். தணிகைவேலன், ஆற்காடு.

? 1989 — இல் நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகளில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?

! இந்தியாவில், ஆட்சி மாற்றம்; சர்வதேச நோக்கில், ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் இடையே வளர்ந்து வரும் நேசம்.

* டி. கே. சுப்பிரமணியன், திருப்பரங்குன்றம்.

? தெருவெங்கும் கேசட் கடைப் பாடல்களின் சப்தம்; கார், டூரிஸ்டு வேன் எழுப்பும் கடும் புகை — இந்நிலையில் தமிழ்நாட்டில் சுற்றுச் சூழல் சுத்தம் பெறுவது எப்படி சார்?

! வீட்டு வாசலில் காகிதக் குப்பை, எச்சில் இலை எறிவதை நிறுத்துவதில் தொடங்கலாமே!

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? அ. தி. மு. க. தொண்டர்களால் உடைக்கப்பட்ட தமது சிலை இருக்கும் இடத்திலேயே எம். ஜி. ஆர். சிலையை அமைத்துக் கொள்ளக் கருணாநிதி அனுமதி வழங்கியிருப்பது குறித்து...?

! ராஜதந்திரம்தான், ஆனால் பலிக்கவில்லையே?

* அ. கிருஷ்ணமூர்த்தி, நரிப்பாளையம்.

? மனிதனை அதிகம் வாட்டுவது மனக் கவலையா? பணக்கவலையா?

! மனக்கவலைதான்; பணம் அதிகம் சேர்ந்தால் அதை எப்படிப் பாதுகாப்பது என்று அதுவும் மனக்கவலையில்தான் முடியும்!

* ஏ. ஜஹ்பர் காதர், சென்னை.

? இந்த வருஷம் புத்தகக் கண்காட்சி போனீர்களா?

! ஆஹா! நல்ல கூட்டம், சலுகை விலை லிம்கா ஸ்டாலிலும் காப்பி — டீ ஸ்டாலிலும்!

* எஸ். சக்திவேல், சிதம்பரம்.

? அ. இ. மு. க. வை விட்டு ஒவ்வோர் ஆளாக விலகுகிறார்களே?

! கட்சித் தலைவரே அவ்வப்போது விலகி, ஒரு முன்னுதாரணமாக விளங்கி, ஊக்கமளித்து வருகிறாரே!

* கே. வி. நாதன், நெய்வேலி.

? தமிழக ஜனதா தளத்துக்கு வெயிட் கூடி வருகிறதே?

! ஆனாலும் சிவாஜி கணேசன் சேர்ந்ததை நீங்கள் இப்படிக் கிண்டல் பண்ணக் கூடாது ஸார்!

* எஸ். என். ராகவன், பெல்லாரி.

? மறைந்த கர்நாடக இசை மேதை வோலேட்டி வேங்கடேஸ்வருலுவின் சிறப்பு?

! கர்நாடக இசைக் கலைஞர்களில் வெகு சிலருக்கே அபூர்வமாக வாய்க்கும் கம்பீரமான குரல் வளம். ஹிந்துஸ்தானி இசையிலும் தேர்ச்சி பெற்று, படே குலாம் அலிகானையே அசர வைத்த படே வித்வான் வோலேட்டி!

* ஆர். தாமரை செம்மேனி, அச்சிறுபாக்கம்.

? ஸ்டாண்டர்ட் மோட்டார்ஸ் கம்பெனி பிரச்னையில் இப்போது ஏற்பட்டுள்ள முடிவு குறித்து?

! இப்போதாவது தொழிலாளர்களுக்கு விமோசனம்பிறந்ததேஎன்றுமகிழும்வேளை

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

கே. ஆர். தேவேந்திரன்,
பிள்ளையார் கோயில் தெரு,
கொணவட்டம்,
வேலூர் — 632 013.



* படே வித்வான்



* தவறைச் சரிசெய்ய

* பறிபோன பதவி



* இருண்டதெல்லாம் சதி!

* லெப்ட் கூடுகிறதே...!

யில், ஆளும் கட்சிக்கு எதிரான தொழிற் சங்கங்கள், மறுபடி முட்டுக்கட்டை போட நினைப்பது வருந்தத்தக்கது. தொழிலகம் மூடியே கிடப்பதை விட, சில விட்டுக் கொடுத்தல்கள் மூலம் அதனை இயங்கச் செய்வதே புத்திசாலித்தனம்.

*** ஜி. பாலகிருஷ்ணன், விசலூர்.**

**? அ. தி. மு. க. வை உடைக்கத் தி.மு.க. சதி செய்வதாக வாழப்பாடி ராமமூர்த்தி கூறியுள்ளாரே?**

! அ. தி. மு. க. விலிருந்து வெளிநடப்புக்கள் தொடர்ந்தால் நமது முதுகுச் சவாரிக்கு முடிவேற்பட்டு விடுமோ என்று அரண்டவர் கண்ணுக்கு இருண்டதெல்லாம் தி. மு. க. சதி!

*** எஸ். குருமூர்த்தி, காட்டாங்குளத்தூர்.**

**? ஸ்ரீகாந்திடமிருந்து இவ்வளவு விரைவில் காப்டன் பதவி பறிபோகும் என்று எதிர்பார்த்தீர்களா?**

! காப்டன் பதவி மட்டுமா பறிபோயிற்று? டீமிலிருந்தே தூக்கி விட்டார்களே! அவரை மட்டுமா? கபில்தேவ் தவிர வேறு பல அனுபவஸ்தர்களையும்தான்! வைத்தால் குடுமி, சிரைத்தால் மொட்டை என்ற ஸெலக்ஷன் போர்டின் போக்குக்கும் ஆட்டக்காரர்கள் அதிகச் சன்மானம் கேட்டதற்கும் தொடர்பிருக்கலாம்! 'நியூஸிலாந்து செல்வது முற்றிலும் புதிய அணி; இளைஞர் அணி' என்று ஸெலக்ஷன் போர்டு பெருமைப்பட்டுக் கொண்டாலும் இவர்கள் அங்கே சந்திக்கப் போவது அனுபவஸ்தர்களை என்பதை நோக்க, நடப்பது எதுவும் இந்தியாவில் கிரிக்கெட்டின் வளர்ச்சிக்கோ, அல்லது நாட்டின் கௌரவத்துக்கோ உகந்ததாக இல்லை.

*** கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.***

**? 'விமானப் பயணத் தொடக்கத்திலும் முடிவிலும் பணிப் பெண்கள் 'நமஸ்தே' சொல்வதை நிறுத்திவிட வேண்டும்' என்று ஓர் எம். பி. கூறியிருக்கிறாரே?**

! பெரும்பாலான விமானப் பயணிகள் கையில் ஒரு ஸூட்கேஸ் அல்லது பிரீஃப் கேஸுடன்தான் ஏறி, இறங்குகிறார்கள். அவர்களுக்கு, பதிலுக்குக் கைகூப்ப முடியாத தர்மசங்கட நிலை உள்ளது. எனவே, பணிப் பெண் மட்டுமே கைகூப்பி, நமஸ்தே கூறி அசடு வழிய வேண்டியிருக்கிறது. மொழிப் பிரச்னையைக் கௌரவப் பிரச்னையாக்காமல், 'குட்மார்னிங்' அல்லது 'குட் டே' என்று சொன்னால், பயணியும் பதிலுக்குத் 'தேங்க்யூ' கூறியபடியே நடந்து போய்க் கொண்டிருப்பார்.

*** கே. ரமேஷ், செங்குன்றம்.**

**? அரசியலில் தாம் பல தவறுகள் செய்திருப்பதாகவும் அவற்றைச் சரி செய்யும் நோக்கில்தான் ஜனதா தளத்தில் சேர்ந்திருப்பதாகவும் ஹெக்டே கூறுகிறாரே?**

! அடுத்த தடவை கட்சி மாறும் போது, ஜனதா தளத்தில் சேர்ந்த தவறையும் சேர்த்துக் கொள்வார்!

*** கோ. நாகேஸ்வரன், குடியாத்தம்.**

**? சுயநலம் கருதாமல் மக்கள் நலனுக்காகவே பாடுபடும் கட்சி எப்போது உருவாகும்?**

! சூரியன் மேற்கே உதிக்கும் போது!

*** எஸ். பி. மருதாசலம், சாணார்பாளையம்.**

**? புதிய தேசிய முன்னணி அரசு எப்படிச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது?**

! ஃபாரூக் அப்துல்லா ஆட்சியைக் கலைக்கக் கூடாது என்ற நல்லெண்ணத்தையும் பாகிஸ்தானுடன் நல்லுறவை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற நல்லெண்ணத்தையும், காஷ்மீரில் உள்ள பிரிவினைவாதிகளும், பயங்கரவாதிகளும், பலவீனம் என்று கருதி வாலாட்ட அனுமதித்துக் கொண்டிருக்கிறது. தேசிய முன்னணி மத்திய அரசின் இந்தப் போக்கு ஆபத்தானது!

* விலகி, ஊக்கமளித்து...



## நீங்கள் கேட்டவை

## — தராசு



* கவிஞர் இல்லம் — என்றைக்கு நினைவுச் சின்னம் ஆகுமோ?



* திறந்த வெளி ஆஞ்சநேயர் கோயில்

நாமக்கல்லுக்கு ஒரு விசிட்!

# இரும்புக் குதிரைகள் உருவாகும் இடம்!

திறந்த வெளி தியேட்டர், திறந்த வெளி ஓட்டல் கேள்விப்பட்டிருக்கிறோம். திறந்த வெளிக் கோயில் கேள்விப்பட்டதுண்டோ?

பிரசித்தி பெற்ற நாமக்கல் ஆஞ்சநேயர் கோயிலைத் திறந்த வெளிக் கோயில் என்றுதான் சொல்ல வேண்டும். மேலே விதானம் இல்லாமல், திறந்த வெளியில் காற்று, மழை, வெயில் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு கம்பீரமாக நிற்கும் ஆஞ்சநேயர், சம்பிரதாயமான கட்டடமோ, கோபுரமோ இன்றி இருப்பதை இங்கேதான் காணலாம். இன்னமும் சிலை வளர்ந்து கொண்டே இருப்பதால், மேல் விதானம் கட்டப்படவில்லை என்று ஒரு காரணம் சொல்லப்பட்டாலும், உண்மை என்ன?

ஐம்பது வருடங்களாக இந்தக் கோயிலோடு தொடர்பு கொண்டிருக்கும் வேங்கட நரசிம்ம பட்டாச்சாரியார் சொன்னார்:

"எதிரே இருக்கும் நரசிம்மர் கோயிலைப் பாருங்கள். அங்கே விதானம் இருக்கிறதா? சுவாமிக்கே விதானம் இல்லாத போது, தாசனுக்கு எதற்கு என்று ஆஞ்சநேயர் மறுத்து விட்டார்!"

எதிரே தெரிந்த லட்சுமி நரசிம்மர் கோயில், குடவரைக் கோயில், மலையைக் குடைந்து உருவாக்கப்பட்ட அற்புதமான கோயில், நரசிம்மரின் பிரம்மாண்ட சிலை

யையும், சுற்றிலும் வாமன, வராக அவதாரச் சிற்பங்கள் சிலவற்றையும் கண்ட போது, நாமக்கல் ஆஞ்சநேயர் பற்றி மட்டுமே அறிந்திருந்த நமக்குச் சற்று வியப்பேற்படுகிறது.

முப்பத்திரண்டு ஆண்டுகளாக இங்கே அர்ச்சகராக இருந்து வரும் வேங்கட சேஷய்யங்கார், ''இது இருபத்தி மூன்று அடி மலைக்குள்ளே குடைந்து அமைக்கப் பட்டது. பல்லவ சிற்பக் கலையை இந்தப் பக்கத்துக்கு அறிமுகம் செய்ய விரும்பி உருவாக்கப்பட்ட கோயில். மறுபக்கம் ரங்கநாத சுவாமி கோயில். மார்கழி மாத வைகுண்ட ஏகாதசிக்குச் சுமார் ஒரு லட்சம் பேர் தரிசனம் செய்வார்கள்!'' என்றார்.

பரம்பரை அர்ச்சகர்கள். சம்பளம் கிடையாது. உண்டியல் வருமானம்தான் கோயிலுக்கு உதவுகிறது!

இந்தக் கோயிலின் நாமகிரித் தாயார் சன்னதியில் கணித மேதை ராமானுஜம் இரண்டு நாட்கள் படுத்துக் கிடந்தாராம். இங்கிலாந்துக்குச் செல்ல நாமகிரித் தாயாரின் உத்தரவு கிடைக்கக் காத்திருந்தாராம்!

**ஆ**ஞ்சநேயருக்கு அடுத்தபடியாக,



* இரும்புக் குதிரை (லாரி) உருவாகிறது!

லாரிகளுக்கு பாடி பில்டிங், கோழி முட்டை உற்பத்தி ஆகியவற்றுடன் சம்பந்தப்படுத்திப் பேசப்படும் நகரம் நாமக்கல்.

நடராஜபுரத்தில் இருக்கும் வி. ராஜு, பாடி பில்டிங் தொழிலில் ஒரு முன்னோடி: ''முதலில் அண்ணனுடன் சேர்ந்து 1957 இல் துறையூர் ரோடில் பட்டறை போட்டேன். 61ல்தான் தனியாக ஆரம்பித்தேன். 64ல் கூட டி.வி.எஸ்.ஸில்தான் கொடுப்பார்கள். பிறகு படிப்படியாக நாங்களும் பிஸினஸ் பிடித்தோம். வேலண்டியிலிருந்து வெறும் இன்ஜினோடு வரும். தினசரி நூறு பேருக்கு மேல் என்னிடம் வேலை செய்ய ஆரம்பித்தார்கள்... தூத்துக்குடி ஹார்பர் கட்டட வேலையின் போது, சமுத்திரத்திலிருந்து பதினாலு டன் — பதினைந்து டன் எடையுள்ள ஒரே கல்லை அப்படியே ஏற்றிக் கொண்டு வர, 'சேஸிஸ்' மீது 'பீம்' வைத்துக் கட்டவும், 'டிப்பர் ஸ்கூல் பாடி' கட்டவும் ஆரம்பித்தேன். சேலம் ஸ்கூல் கம்பெனிக்குச் செய்து கொடுத்தேன். மதுக்கரை, தாழையூத்து சிமெண்ட் பாக்டரிக்கும் நான்தான். டெக்னிகல் சமாசாரமெல்லாம் நானாகவேதான் தெரிந்து கொண்டேன். மூட்டை லோடு ஏற்ற மர பாடி; கல், மண் ஏற்ற ஸ்கூல் பாடி என்று என் சொந்த முயற்சியிலேயே கற்றுக் கொண்டு, செய்தேன். அன்று 2,000 ரூபாயில் கட்ட முடிந்தது. இன்றைக்கு 30,000 ரூபாய் ஆகிறது!''

ராஜு, நாமக்கல் லயன்ஸ் கிளப் உறுப்பினர்; ஆஞ்சநேயர் கோயிலின் மானேஜிங் டிரஸ்டி. திருச்சி சாலையில் இருக்கும் ரமேஷ் தியேட்டர் உரிமையாளர்! ''கரூர் வரை டிக்கெட் பேரில் டாக்ஸ். நாமக்கல்லில் மட்டும் காம்பவுண்டிங் டாக்ஸ்! படம் ஓடினாலும் ஓடா விட்டாலும் ஒரு நாளைக்கு ஆயிரத்தெழுநூறு ரூபாய் டாக்ஸ் கட்டியாகணும்!'' என்றார்.

* ''டெக்னிகல் சமாச்சாரமெல்லாம் நானாகவே தெரிந்து கொண்டேன்!'' — வி. ராஜு





* வேங்கட நரசிம்ம பட்டாச்சாரி

**ப**ஸ் ஸ்டாண்ட் அருகே கமலாலயம் வறண்டு கிடக்கிறது. ''நகரத்துக்கே இது தான் முன்பு குடி தண்ணீர் தந்து கொண்டிருந்தது'' என்றார் ஒரு நாமக்கல்வாசி.

இப்போது?



• ''நகரசபை உயர்நிலைப் பள்ளியில் மூன்று ஆண்டுகளாக நூறு சதம் ரிசல்ட்!''
— கமிஷனர் பி. என். ரங்கசாமி



• அற்புதமான பல்லவ சிற்பங்கள் — லட்சுமி நரசிம்மர் கோயில்

சைக்கிளில் கட்டியிருக்கும் குடங்களைச் சுட்டிக் காட்டி, ''மூன்று நாளைக்கு ஒரு தடவை பைப்பில் நல்ல தண்ணீர் கிடைக்கிறது. மீதிக்குக் கிணற்றுத் தண்ணீர்தான். உப்புத் தண்ணீர்!'' என்றார்.

''மூன்று நாளைக்குச் சேமித்து வைத்துக் கொள்ள வேண்டுமா?''

''ஆமாம். ஆனால் பெரிய கஷ்டம் எதுவும் இல்லை!''

மூனிசிபல் கமிஷனர் பி. என். ரங்கசாமி அவர்களைப் பேட்டி கண்ட போது, ''சந்தித்தவர்கள் எல்லாம், அலுத்துக் கொள்ளாமல் தண்ணீர்ப் பிரச்னை பிரமாதம் இல்லை என்கிறார்களே?'' என்று வியப்புடன் கேட்டோம்.

''அவர்களுக்குப் பழகிப் போயிருக்கும். அதனால் அப்படிச் சொல்லுகிறார்களோ என்னவோ?'' என்றார் ரங்கசாமி, புன் சிரிப்புடன்.

''முன்பெல்லாம் ஐந்து நாளைக்கு ஒரு முறைதான் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்தோம். பிறகு நாலு நாளைக்கு ஒருமுறை ஆயிற்று. இப்போது மூன்று நாளைக்கு ஒருமுறை... 84ல் இரண்டு கோடி ரூபாய்த் திட்டம் போட்டோம். டவுனை நாலு ஸோன்களாகப் பிரித்திருக்கிறோம்... கிட்டத்தட்டத் தொண்ணூறு சதவீதம் வேலை முடிந்து விட்டது. இரண்டு, மூன்று மாதங்களில் பாக்கி வேலையும் முடிந்து விடும். பிறகு ஒருநாள் விட்டு ஒரு நாள் தண்ணீர் விட சாத்தியமாகும்'' என்றார்.

இன்னொரு ப்ளஸ் பாயிண்ட்: மின் தடை ஏற்பட்டு விட்டால், ஜெனரேடர் உபயோகித்து, நீர் விநியோகம் செய்யத் தவறுவதில்லை, நகரசபை.

ஐம்பத்திரண்டாயிரம் ஜனத் தொகை. நகரசபை தி. மு. க. வசம். பன்னிரண்டு பேர் தி. மு. க.; நாலு அ. தி. மு. க.; ஒரு காங்கிரஸ்; ஒரு கம்யூனிஸ்ட்; இரண்டு ஜனதா (அட!) உறுப்பினர்கள். நகரசபைத் தலைவர்: பழனிவேலு.

நாமக்கல் நகரசபைக்கு நிச்சயம் ஒரு சபாஷ் போட வேண்டும். சாக்கடை நிரம்பித் ததும்பி வழிவதோ, குப்பை கூளங்களான சாலைகளோ தென்படவில்லை.

புதிய குழாய்கள் போட, சாலைகள் நடுவே பிளக்கப்பட்டாலும், அவை மூடப்பட்டு, ரோடுகள் பெரும்பாலும் நன்றாகவே இருந்தன.

நகராட்சி நடத்தும் உயர்நிலைப் பள்ளிக்கும் ஒரு ஷொட்டு. தொடர்ந்து மூன்று வருடங்களாக நூறு பர்செண்ட் ரிசல்ட்! இந்த வருடம் மட்டும்தான் 96 சதம்.

''நாமக்கல்லின் பெரும்பகுதியும் மழை நீரை எதிர்பார்த்திருக்கும் பாசனத்துக்குட்பட்டது,'' என்றார் விவசாயத் துறை அதிகாரிகளில் ஒருவரான கோவிந்தசாமி. அப்படியும் முக்கிய பயிர் நெல்தான். கரும்பும் இருபதாயிரம் ஏக்கரில் பயிராகிறது. அப்படியே மோகனூர் சர்க்கரை ஆலைக்குப் போகிறதாம்.

''காவிரிப்பாசனம் பெறும் கபிலர் மலை, பரமத்தி, மோகனூர் மூன்று பகுதிகளிலும் நிறைய வெற்றிலை பயிராகிறது. தினசரி ஆறு லாரி லோடு வெற்றிலை பம்பாய்க்குப் போகிறது. ஒரு லாரி லோடு நாலு லட்ச ரூபாய்!'' என்றார் விவசாயத் துறைத் தகவல் அதிகாரி மதியழகன். வாழை, வேர்க்கடலை, சோளம், கம்பு, தவிர, கொல்லிமலைப் பகுதியில் நீர் பாய்ச்சிப் பயிராக்கும் இறவைப் பயிரான மரவள்ளியும் உண்டு.

''வேர்க்கடலை பயிர் பண்ணும்போதே ஆமணக்கையும் சேர்த்தே பயிர் பண்ணுவார்கள். 'மிக்ஸட் க்ராப்' என்போம். மழை இல்லை என்றாலும் ஒன்றும் ஆகிவிடாது. ஆமணக்கு வறட்சிக்கு எதிராகச் செயல்படும் தன்மை உடையது!''

''நாமக்கல் வட்டத்தில் மட்டும் சிறு விவசாயிகள் ஐயாயிரம் பேரும், இதர விவசாயிகள் இரண்டாயிரம் பேரும் இருக்கிறார்கள். இவர்களுக்கெல்லாம், முறை

யான கருத்தரங்கங்கள் நடைபெறுகின்றன!'' என்ற போது வியப்பாயிருந்தது.

''கருத்தரங்கமா?''

''ஆமாம். செமினார்! போன மாதம் கரும்பு. இன்றைக்கு வெங்காய செமினார்! எங்களிடம் வி.ஸி.ஆர்., ஃபோட்டோ ஃபோன் எல்லா வசதிகளும் இருக்கின்றன. விவசாயிகள் சும்மா கலந்து கொண்டு வேடிக்கை பார்த்து விட்டுப் போக மாட்டார்கள்... கேள்விகள் நிறையவே கேட்பார்கள்!'' என்றார் மதியழகன்.

**நா**மக்கல்லுக்கு வந்து விட்டு, கோழி முட்டை பற்றிச் சொல்லா விட்டால் எப்படி?

பரமத்தி சாலையில் இருக்கும் வான்கிளி பண்ணை உரிமையாளர் சுப்பிரமணியம் சொன்னார்:

''இங்கே மட்டும் ஒரு கோடியே முப்பது லட்சம் பறவைகள் இருக்கின்றன. ஒரு நாளைக்குச் சுமார் தொண்ணூறு முதல் தொண்ணூற்றைந்து லட்சம் முட்டைகள் உற்பத்தி ஆகின்றன. டில்லிக்கும், பம்பாய்க்கும் கூட இங்கிருந்து போகிறது... வாரா வாரம் வியாழக் கிழமைதான் முட்டை விலையை நிர்ணயிப்போம். மதுரை, திருநெல்வேலி, கன்யாகுமாரி, தூத்துக்குடி என்று பல இடங்களுக்கும் ஆட்கள் செல்லுவார்கள். மார்க்கெட் எப்படி என்று கணிப்பார்கள். இவர்கள்தான் ரேட் தீர்மானிப்பார்கள். நாமக்கல் முட்டை உற்பத்தியாளர் அசோஸியேஷன் மூலமாக அறிவிப்பார்கள். ஒரே ரேட்தான்... இரண்டு வாரத்துக்கு ஒரு முறை சத்துணவோடு கொடுக்கப்படும் முட்டையை, வாரத்துக்கு ஒரு முறை கொடுக்கலாம். இது வரை IPKF க்கு என்று அனுப்பப்பட்டு வந்த முட்டைகளும் இனி குறைந்து விடும்...''

**நா**மக்கல் கவிஞர் ராமலிங்கம் பிள்ளையின் இல்லம் இருக்கும், தட்டாரத் தெருவுக்குக் 'கவிஞர் ராமலிங்கம் தெரு' என்று பெயர் மாற்றியிருக்கிறார்கள். ஆனால் கவிஞரின் வீட்டு முகப்பில் 'இராமலிங்கம் பிள்ளை இல்லம்' என்று மட்டும் காணப்படுகிறது! உள்ளே, கவிஞர் குடும்பத்துக்குத் தெரிந்த குடும்பங்கள் இரண்டு வசித்து வருகின்றன. என்றைக்குப் பழுது பார்க்கப்பட்டு நினைவு இல்லமாக மாறப் போகிறதோ!

• ''இங்கெல்லாம் வெற்றிலை பயிராகிறது...'' — மதியழகன்



**ச**ங்கீதத்துக்கும் நாமக்கல்லுக்கும் கூடத் தொடர்பு உண்டு. ''ஆமாம், அரியக்குடியின் குரு பல்லவி நரசிம்மய்யங்கார் நாமக்கல்லைச் சேர்ந்தவர். மாத்வ சம்பிரதாயத்தைச் சேர்ந்த நரஹரி ஆச்சார் நாமகிரித் தாயார் மீது (மாதாட பாரோ போன்ற) கீர்த்தனைகள் பல இயற்றியிருக்கிறார்....

**நா**மக்கல்லில் பிரதானமான மூன்று இடங்களில் சுமார் நூறு பிரைவேட் டாக்ஸிகள் இருக்கின்றன! பல, TIIC உதவியுடன் வாங்கப்பட்ட புது அம்பாசடர் கார்கள். இத்தனை சிறிய ஊரில் இத்தனை கார்களா? வருமானம் எப்படி?

தலைவர் வி. கே. ராமசாமி சொன்னார்:

''திருச்சி, மதுரை யாத்திரை போக சான்ஸ் சில சமயம் கிடைக்கும். மற்றபடி கொடுமையான வாழ்க்கைதான். இதில் போலீஸ் கெடுபிடி. மாமூல்... குவார்ட்டர்லி டாக்ஸ் 120 ரூபாய் தவிர, டெம்பரரி பெர்மிட்டுக்காக சலானுக்கு நூறு ரூபாயும், ஆபீசில் செலவுக்கு 50 ரூபாயும் ஆகும். அந்த டெம்பரரி பெர்மிட்டும் பதினைந்து நாள்தான் செல்லும். அதையாவது முப்பது நாட்கள் ஆக்கலாம். பெர்மிட்டில் கொடுக்கப்படும் ஊர்களைத் தவிர வேறு எங்கும் போய் விடக் கூடாது என்று கெடுபிடி வேறு! இந்த ஷெட்டே ஹைவேஸ் சாலையில் போட்டிருக்கிறோம். எப்போது தகராறு வருமோ தெரியாது! முனிசிபாலிடி டூரிஸ்ட் டாக்சிக்கு என்று இடம் ஒதுக்க மாட்டேன் என்கிறது! வருகிற வரும்படியில் பெண்டாட்டி பிள்ளையைக் காப்பாற்றுவோமா, கடனை அடைப்போமா? இத்தனையும் போதாது என்று, கார்கள் கடத்தல் வேறு. டிரைவரைக் கட்டிப் போட்டு விட்டு, வண்டியை எடுத்துக் கொண்டு போய் விடும் கும்பல்... பிழைப்பு அப்படி ஒன்றும் சொல்லிக் கொள்கிற மாதிரி இல்லை சார்!''

சந்தோஷமாகத் திரும்ப நினைத்த போது, ராமசாமியின் குரலில் சோகம் இழையோடிச் சிந்திக்க வைத்தது.

— **சாருகேசி.**

புகைப்படங்கள்: **யோகா.**



தருமனின் தோள் மீது கை போட்டு நைச்சியம் பேசி...

முழுக்க முழுக்க நாடகமாக்கி விடாமல் இடை இடையே அளவான, அழகான நிருத்தங்களையும் சேர்த்திருந்தார்.

சகுனி பாத்திரத்தை ஏற்ற பாலகோபாலின் நடிப்பு விஞ்சி நின்றது. பகடையைக் குலுக்குவதிலும் உருட்டுவதிலுமே இன்பம் காண்பதும், அதன் ஒலியைச் சங்கீதமாய் ரசிப்பதும், 'இழந்ததெல்லாம் மீட்பாய்' என்று தர்மபுத்திரனின் தோள் மேல் கை போட்டு நைச்சியம் பேசுவதும்... தர்மபுத்திரர் மனவலிமை இழந்ததில் ஆச்சரியமேயில்லை என்று நம்மை நினைக்க வைத்து விட்டார்!

தர்மபுத்திரரின் தவிப்பையும் இயலாமையையும் வெகு இயல்பாய் வெளிப்படுத்தினார் இளம் கலைஞர் நரேந்திரன். பாஞ்சாலி பாத்திரத்தை ஏற்ற ஜ்யோத்சனா மிகைப்படுத்தாமல் நடித்துக் கண்ணீரை வரவழைத்தார். துரியோதனன் பாத்திரத்தை அநாயசமாய் ஏற்றுச் செய்தார் ஜனார்த்தனன்.

# பாஞ்சாலி சபதம்

மகாகவி பாரதியார் 'தீர்க்கதரிசி என்பதற்கு மேலும் ஒரு சான்று கிடைத்துள்ளது: பார்ப்பவர் எல்லோரும் பரவசமாகும்படி கலாக்ஷேத்ரா குழுவினர் பாஞ்சாலி சபதம் நாட்டிய நாடகத்தை இன்று அரங்கேற்றுவார்கள் என்பதை அன்றே உணர்ந்து, அதற்கு வசதியாகக் கவிதை நாடகத்தை எழுதி வைத்திருக்கிறார் பாருங்கள்!

நாட்டிய நாடகம் முடிந்து, வெளியேறிக் கொண்டிருந்த ஒரு ரசிகர், தம்மை மறந்து உரத்த குரலில் வியந்தபடி நடந்தார்: "அற்புதம்! அற்புதம்! எவ்வளவு மனப்பூர்வமான ஈடுபாடு இந்தக் கலைஞர்களுக்கு!"

அந்த ஈடுபாடு, அன்று நிகழ்ச்சியில் பங்கேற்ற ஒவ்வொரு கலைஞரின் ஒவ்வொரு அசைவிலும் உழைப்பின் மெருகாக வெளிப்பட்டது!

முதல் பாராட்டு: தயாரித்து அளித்த கிருஷ்ணவேணி லக்ஷ்மணனுக்கு. ஓர் இடத்தில் கூட அலுப்புத் தட்ட விடாமல் விறுவிறுப்பாகக் கொண்டு சென்றார் நிகழ்ச்சியை. வஸ்திராபஹரணக் காட்சியில் கௌரவர்களின் குரூரமும் பாஞ்சாலியின் தவிப்பும் துக்கமும் வெளிப்பட்டனவேயொழியத் துளியும் விரசம் தோன்றவில்லை. சூதாட்டக் காட்சியில் படிப்படியாய் விறுவிறுப்பை வளர்த்து, ஒவ்வொன்றாக இழந்து தவித்த யுதிஷ்டிரனுடன் நம்மையும் தவிக்கச் செய்தார். நிகழ்ச்சியை

பசுபதியின் இசையமைப்பைப் பாராட்டி, பழைய மாணவர்கள் அவருக்குப் பரிசளித்து மகிழ்ந்தனர். நாமும் மகிழ்ந்தோம். அடுத்த முறை இந் நாட்டிய நாடகம் அரங்கேறும் முன், பாடகர்கள் உச்சரிப்பில் கவனம் செலுத்தி, கவிதை வரிகள் குலையாமல் காதில் விழும்படி செய்தால் இன்னும் அதிகமாக மகிழலாம்.

எப்பேர்பட்டவனையும் வீழ்த்தக் கூடிய சூதாட்டத்தின் கொடிய சக்தி, அதிகார பலம் விளைவிக்கும் மமதை, அதிகாரம் படைத்தவர்களை அண்டி வாழ்ந்து துர்போதனை செய்யும் கூட்டம் — என்று என்றைக்கும் அர்த்தமுள்ளனவாக விளங்கும் வாழ்க்கைப் பாடங்களைச் சொல்கிறது 'பாஞ்சாலி சபதம்' கதை. அவற்றைப் போதனை செய்யாமல், உயிரோட்டமுள்ள பாத்திரப் படைப்பின் மூலமும் ஒலி — ஒளி மற்றும் அசைவுகளின் பிரமிக்க வைக்கும் சேர்க்கையின் மூலமும் வழங்கியதுதான் கலாக்ஷேத்ராவின் வெற்றி. சில பழகிய முகங்களுடன் பல இளம் புதுமுகங்கள் நிகழ்ச்சியில் பிரகாசித்தன.

ருக்மிணி தேவிக்குப் பிறகும் இந்த நிறுவனம் அவர் காட்டிய பாதையில் வெற்றிநடை போடுகிறது என்பது கலை ரசிகர்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் விஷயம்.

— சீதா ரவி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# மூட்டு வலியா ?
# போக்கிடுங்கள் மூவ் மூலம்.

## முழங்கால் மூட்டு வலியா ?
## பின்புற மூட்டு வலியா ?

உங்கள் உடலின் மூட்டுகள், குறிப்பாக முழங்கால்களிலும் பின்புறமும் வயதானாலோ அல்லது கடின செயல்களினாலோ, இவை வலி ஏற்படும் இடங்களாக விளங்குகின்றன. மூட்டுகளில் லூப்ரிகேட்டிங் திரவம் சுரப்பது குறைவதனால், அதில் உராய்வு ஏற்பட்டு, வலிக்கவும் அசௌகரியத்திற்கும் காரணமாகிறது.

## ஆழ ஊடுருவிச் செல்வது

மூவில் மிக அடர்த்தியான விரைவில் ஆவியாகிற இயற்கை எண்ணெய் அடங்கியுள்ளது. அது சருமத்தின் ஊடே மூட்டுவலி ஏற்படுத்தும் பாகம்வரை ஆழமாக ஊடுருவிச் செல்கிறது.

## விரைந்து செயலாற்றுவது

மூவிலுள்ள இயற்கையான எண்ணெய், அதிக வீரியம் வாய்ந்த நிவாரண சாறுகளைக் கொண்டது — உடனடியாக இரத்த ஓட்டத்தை அதிகரிக்கச் செய்து, லூப்ரிகேட்டிங் திரவத்தை மீட்டுப் பெற்றுத் தந்து, விரைவாக நிவாரணம் அளிக்கிறது.

## நீடித்து செயலாற்றுவது

மூவைத் தடவியதும், இதன் ஒப்பற்ற விதம் 'பார்முலேட்' செய்த 'பேஸ்' இயற்கையான எண்ணெயைத் தொடர்ந்து செலுத்தி, வலிக்கும் இடத்தை நீண்ட நேரம் இளஞ் சூடாகவும், மிருதுவாகவும் விளங்கச் செய்கிறது. இது சருமத்தில் எரிச்சலை உண்டுபண்ணுவதில்லை. வலியற்ற இயக்கத்தை மீண்டும் பெறுகிறீர்கள். நீங்கள் மீண்டும் பழையபடியே ஓடியாடி வேலை செய்யலாம்.

**உண்மையாகவே உடனடி நிவாரணம்**

# மூவ்

**மூட்டு வலி நிவாரணி**



PARAS PHARMACEUTICALS PVT. LTD.
Jitendra Chambers, Ashram Road, AHMEDABAD 380 014

Interact: PPPL:169 : Tam.

